# இளஞ்சிறகுகள்

எப்பவும் போலில்லை, வண்டிக்காரத் தேவருக்கு மனசு. என்னவோ போலிருந்தது. யாரையாவது கடித்துக் குதற வேண்டும் போலிருந்தது. கண்ட மேனிக்கு கோபம் கோபமாய் வந்தது. 'சின்ன பாண்டி மகன், இப்படிச் செய்ஞ்சுட்டானே...'

வீட்டு முற்றத்தில் ஓங்கு தாங்காக நின்றார். தார்ப் பாய்ச்சிய வேட்டியும், தலையில் வட்டக் கட்டுத்துண்டு மாய் இருந்தார். திரேகம் பூராவும் சுருள் சுருளாக ரோமம். வெய்யிலில் காய்ந்து காய்ந்து கறுப்பேறின திரேகம். கல்கட்டியாக சதைத் திரட்சி.

பொடி போட்டிருந்த எச்சிலை 'புளிச்'சென்று துப்பிக் கொண்டார். அடிப்பல்லில் இழுவிய சிங்கமார்க் பொடி சுறுசுறுவென்று சுகமாக இருந்தது. காலை வெய்யிலை இடுங்கிய கண்ணால் கடுப்பாகப் பார்த்தார்.

காடியில் கிடக்கும் கூளத்தை லாவி லாவித் தின்கிற மாடுகளின் கழுத்து மணி கிணுகிணுக்கிறது. கள்ளப் பார்வையாக தேவரைப் பார்க்கின்றன. அவரது கோபம், அதுகளுக்குப் புரிகிறது. பிட்டத்தில் ஒட்டுகிற ஈக்களை வாலைச் சுழற்றியடித்து விரட்டுகிறது.

நெத்திலிக் கருவாடு அலசிய தண்ணீரை வெளியே கொட்ட வந்த கண்ணாத்தா, புருஷனை ஒரு தினுசாகப் பார்க்கிறாள். கழுத்தைச் சாய்த்து கடைக்கண் பார்வை. ஆளின் மனசை அளக்கிற மாதிரியான பார்வை.

சளப்பென்று ஊற்றப்பட்ட தண்ணீர். 'கம்ம்'மென்று வந்த கருவாட்டு வாசம்.

''ஏய்க் மனுசா, இந்தா... நிறுத்தி வைச்ச ஓலக்கை கணக்கா நிக்கே?''

''நீ... ஒஞ்சோலியைப் பாரு... வாயைக் குடுத்து, வாயைப் புடுங்காதே... போயிரு''

இறுகலும், உறுமலுமான அவரது குரல். அவளை ஒன்றுமே செய்யவில்லை. திணுக்கிடாமல் கேட்டாள்.

''திருகல் மருகலா நிக்கீயே... என்ன வெவகாரம்னு கேட்டது குத்தமாப் போச்சாக்கும்? யார் மேலே கோபம்?''

''ஊம்ம்...? ஒம்மேலே''

''வா... வந்து புடுங்கு... மனுசா, வாய்யா...''

'போவாள்லே' என்று அலட்சியமும், எகத்தாளமுமாய் உறுமினார்.

''இந்த ஆளுக்கு கோட்டி கீட்டி புடிச்சிருக்கா?'' என்ற முணுமுணுப்போடு உள் நுழைகிற கண்ணாத்தாவை கண்டு கொள்ளாத வண்டிக்காரத் தேவர்.

தெருவில் ஓடுகிற நொண்டி நாயின் ஓரப் பார்வை. காலடிக் குப்பையை கிளறி, 'கெத், கெத்'தென்று குஞ்சு களைக் கூவி யழைக்கிற கோழியின் வாஞ்சை.

கூரை மாதிரி வேயப்பட்டிருந்த கூளப்படப்பின் உச்சியில் சிட்டுக்குருவிகள். ஜோடிக் குருவிகள். தத்தி தத்தி இரை பொறுக்குகிற மைனாக்கள், ரெட்டை ரெட்டையாக.

யார் மேலே கோபம்? எதன் மீது கோபம்? என்னத்துக் காக கோபம்? அவர் மீது தான்... அவருக்குக் கோபம். சின்னப் பாண்டி மகனால் வர்ற கோபம்.

**மனசின் ஆழத்தில் ஒரு முள் குத்திக் கொண்டிருக் கிறது. குற்ற உணர்ச்சியாக அழுத்துகிற முள். சுருக் சுருக்கென்று வலிக்கிற முள்.**

**''என்ன தேவரய்யா, ராசபாளையம் சந்தைக்கு வண்டி போகுதா?''**

**வேற்றுச் சத்தம், லௌகீக உலகின் கையாக அவரைப் பற்றி இழுக்கிறது. நினைவின் ஆழத்திலிருந்து வெளியே வருகிறார். தேவராசு நிற்கிறான். சின்ன வியாபாரி. மஞ்சள் பை கையில் கோர்த்திருக்கிறான். வெள்ளைச் சட்டை. அரைக்கை. மடித்துக் கட்டிய கதர் வேட்டி.**

ஊர்ச் சம்சாரிகள் விளைய வைத்த பருத்தி, வற்றல், நவதான்யம் வாங்கிக் கொண்டு போய், ராச பாளையம் கமிஷன் கடையில் போட்டு... நாலு சில்லறை பார்க் கிறவன். ஓரிடத்தில் நிற்கமாட்டான். காலில் சக்கரம் கட்டிக் கொண்டலைவான். அவனது உழைப்பார்வம் தேவருக்கு ரொம்பப் பிடிக்கும்.

''என்னப்பா... என்னமும் லோடு கிடக்கா?''

''ஆமா. நாலு பருத்தி மருகை, ஏழெட்டு மூடை ஒட்டுக் கம்பு எடை போட்டுக் கெடக்கு''

''ஜோதி மகால்லே தானே எறக்கணும்?''

''ஆமய்யா...''

''என்ன தேவராசு... ஓட்டத்துலே நிக்கீயே... எங்க, தூரவா?''

''செல்லம்பட்டியிலே ஒம்பது மூடை சொங்குச் சோளம் கெடக்குன்னு ஒரு தாக்கல். அதா...ன் போய்க் கிட்டிருக் கேன். வெலை தெகைஞ்சுட்டா... உங்க வண்டியிலே லோடு ஏத்திரலாம்...''

''போ...போ... வேர்வையை தொடைக்க நேரமில்லாம, ஓடிப் பாடுபடுதீயே... இதான் நமக்குப் புடிக்கும்...''

தன்னடக்கமாய் சிரிக்கிற தேவராசு. புகழ்ச்சிக்குக் கூசுகிற ஒரு சிரிப்பு. ''என்னமோ... வவுத்துக் கஞ்சிக்கு வழி பாக்கணும் லே?''

''வவுத்துக் கஞ்சிக்கு அலையுறது நாங்க. கழுத்து நகை கோர்க்குறதுக்கு அலையுறது ஏவாரிக. ஓடு...ஓடு''

தேவராசு ஓட்டம் போல நடக்கிற வேகத்தை ரசித்தார். படப்புக்கு கொஞ்சம் தள்ளி நின்ற கூட்டு வண்டிக்குப் போகிற தேவர். பெரிய மாட்டு வண்டி. நீளமான தேக்கு வாரி ரெண்டு, வண்டிக்கு முன்னும் பின்னுமாக நீட்டிக் கொண்டு. உயரமான கூடு. உள் உயரமுள்ள நீள வாகான கூடு. வரி வரியாக ஓடிக்கிடக்கிற பின்னலான கயிறுகள்.

லூசாக இருந்த ரெண்டு கயிறுகளை இறுக்கி, முடிச்சை இறுக்குகிறார், தேவர். தனது கடந்த காலத்தையே தட்டிப் பார்ப்பவர் போல ஒரு யோசனையோடு கூட்டை தட்டினார். உயிருள்ள பாசப் பிராணியை தட்டுகிற மாதிரியான வாஞ்சையான வருடல். தனக்கு வாழ்வும் மரியாதையும் தந்த கூட்டு வண்டி.

அய்யா மண்டையைப் போடுகிற போது நண்டும் நசுக்குமாக ஏழு பிள்ளைகள். ரெண்டாவது இவர். சிறு வயசில் கூழ் கிடைப்பதே பெரும் பாடு. ஆடு மேய்ப்பு தான் பாடு. காடு கரைகளில் பச்சை நிலக் கடலை, தட்டாங் காய், உளுந்தங்காய் பறித்து அவித்துத் தின்பது தான் வயிற்றுப் பாடு. அதில் ஒருகைப்பிடி வீட்டுக்கு வந்து விட்டால்... 'உனக்கு, எனக்கு' என்று பிள்ளைகளுக்குள் ஒரே சண்டைக் காடு. தின்பண்டம் அம்புட்டு அரிதாக இருக்கும். பஞ்சத்தில் அவிந்த காலம்... பஞ்சம் என்றால்... பஞ்சம், அப்படிப் பஞ்சம், அப்ப.

ஆடு மேய்க்கிற போது... வெள்ளாமை அழிமானம். அபராதம் கொடுக்க ஆடு விற்று, ஆடு விற்று... நொறுங்கிய காலம்.

நாயக்கர் பண்ணையில் சாணி சகதி அள்ளி, மாடு கன்றுகளை குளிப்பாட்டி, காட்டு வேலை செய்து... தொழுவத்தில் குத்துக்கால் வைத்து, பழைய கஞ்சிக் கரைசலை குடித்த நாட்கள்... தரிசாக கிடந்த ஒன்றரைக் குறுக்கம் புஞ்சையை பாடுபடலாம் என்று சொன்னவளே, கண்ணாத்தா தான். கடுமையான பாட்டுக்காரி. ரவ்விலும் பகலிலும் உடம்பைக் கடம்பாகக் கரைக்கிற பாட்டாளி. ஆம்பளைக்குச் சமதையாக கமலை இறைப்பாள். ஏர் பிடிப்பாள். வண்டிமாடு பத்துவாள்.

மாட்டுவண்டி, கூட்டு வண்டியாகி... கடைக் காடு களுக்கு பாரமடிக்கலாம் என்று யோசித்தவளும் அவள் தான்.

வெறும் ராக்கனை 'வண்டிக்காரத் தேவர்' என்று ஒரு மதிப்பான ஆளாக்கியது... இந்த கூட்டு வண்டிதான்.

சுக்கான் கல்லாக வாழ்வின் ஓரத்தில் கிடந்த ராக்கனை ஓர் ஆம்பளையாக நினைக்க வைத்ததே... கண்ணாத்தாளின் தூண்டில் பார்வைதான்.

நாதியில்லை. தாலியெடுத்து ஆசீர்வதிக்க ஆளில்லை. இவர்களாகவே இணைந்து... குடும்பமாகி... தரிசாகக் கிடந்த காடு புஞ்சையாகி... ராக்கன், வண்டிக்காரத் தேவராகி...

கூட்டை வருடினார். ஈச்சம்பாய் மேல் தார் அடிக்கப் பட்டிருந்த சொர சொரப்பும்... வழு வழுப்பும்...

கண்ணாத்தா... சரியான மனுசி தான். கல்லை வைர மாக்குற பராசக்தியம்மா. ஆளாக்குகிற தாய். ஆளை வசக்கி, புதுசாய் வார்த்து... உத்தமனாக்குகிற தாய்ச்சாமி.

கட்டிச் சதையான தோளில் தட்டுகிற ஓர் உணர்வு, திரும்பினார், கண்ணாத்தா.

''நெத்திலிக் கருவாடு வதக்கியிருக்கு. வா... சாப்புடு...'' சொல்லிக் கொண்டே முகம் பார்த்தாள். கோபத்தைக் காணோம்.

அவர் கண்ணெல்லாம் கோர்த்திருக்கிற நீர். நாசி நுனியின் விசும்பல் துடிப்பு. முகமெல்லாம் மனசைப் பூசி வைத்த மாதிரியோர் மன நெகிழ்ச்சி.

இவளுக்குள் பகீரென்றது. முகத்திகைப்பு.

''என்னய்யா...?''

''கஞ்சிக்கு வழியத்துக் கெடந்த என்னை... நாலைஞ்சு ஜீவனுக்கு கஞ்சி ஊத்துற ஆளாக்குனீயே... அதை நெனைச் சேன்...''

கண்ணாத்தா மனசுக்குள்ளும் கடந்தோடுகிற கடந்த காலத் துன்ப வெக்கை.

''நானுந்தான் நாதியத்த சிறுக்கியா கெடந்தேன். வவுத்தையும் மானத்தையும் காத்துக்கிட வழியத்துப் போயிருந்தேன்... நீ தான், என்னை ஒரு குடும்ப மகராசியா யிருக்கே. பொறக்குற புள்ளைக்கு 'சேனை' வைக்க என்னை கூப்புடுறாக. நெறைஞ்ச வாழ்வுக்காரின்னு நெனைக்குறாக. எல்லாம் ஒன்னாலேதான்யா?''

''ம்ஹூம்... ஒன்னாலே தான்''

கனிந்து குழைவாக சிரிக்கிற கண்ணாத்தா. அவரது முதுகை வருடுகிற அன்பான உள்ளங்கை. கை வழியாக ஊடுருவிப் பாய்கிற பாச மின்சாரம். 'ஆமய்யா... நாம தான்''

''ஒண்ணுக்கும் ஆகாம ஒத்தை ஒத்தையா மேய்ஞ்ச ரெண்டு மாடுக... ஒண்ணு சேர்றப்ப... மண்ணைப் பொன் னாக்குற ஒழவு மாடுகளாகுது. மாடுக பட்ட பாடுகளாலே மண்ணு பொன்னாகுது. வாய்யா... வா... சாப்புடு... நாம அந்த மாடுக தான்''

கைப்பிடியாக அவள் அழைத்துச் செல்ல... ஆட்டுக் குட்டி போல கட்டுப்பட்டு பின் சென்றார், தேவர்.

மிளகாய் வத்தல் இணுக்குகளை பொறுக்கிக் கீழே போட்ட வண்டிக்காரத் தேவர், எண்ணெயில் வெந்த சீரகங் களை நுனிப் பல்லில் கடித்து ருசிக்கிறார். வாசமான நெத்திலிக் கருவாட்டை நாக்கில் வைத்தார். ருசியிலும் மணத்திலும் கிறங்குகிற மனசு.

ஒரு கை நிறைய குழம்புச் சோற்றை வாய்க்குள் திணித்த தேவர்... ருசியில் சொக்கினார். கண்ணில் மலர்ச்சி. முகச் சுருக்க விரிவு.

''கொழம்பு நல்லாயிருக்கா...?''

''ஓங்கை மணக்குது''

என்றவர், மறுபடியும் குழம்புக்கு வந்தார்.

''கவுச்சி வாடைன்னா... நமக்கு ஒரு கிறுகிறுப்புதான்''

பின்பாரமாக பருத்தி மருகை. முன்பாரமாக தானிய மூடைகள், கடைக்காரர்கள் சுருட்டிப் போட்ட சாக்குக் கட்டுகள். தகர டின்கள். வெற்றுக் கூடைகள்.

நடுச்சாமத்துக்கு வண்டி போட்டது. தாட்டியமான மாடுகள் காலுக்குப் பழகிய பாதையில், ஒரே வேகத்தில் நடை போட்டன. வண்டிப் பைதாவின் 'தடக், தடக்'கென்ற சத்தம் சங்கீதமாக, வைக்கோல் திணித்த சாக்கு மெத்தையில் கண்ணயர்கிற தேவர்.

கண்ணயர விடாமல் மனசை இச்சிலாத்திப் படுத்துகிற அந்த நினைவுகள். குற்ற உறுத்தலாக வலியெடுக்கிற முள் நினைவுகள்.

சுருக், சுருக் கென்று குத்துகிற வலி.

வாலைச் சுழற்றியடிக்கிற மாடுகளின் ஒரு சீரான குளம்புச் சத்தமும், பட்டறைவார் மணிச்சத்தலயமும், வண்டியின் அசைவுகளும் நினைவுகளுக்கு பின்னணி இசையாக இருந்தன.

... ரெண்டு மாதத்துக்கு முன்னால் -

மேலத் தெரு வழியாக வண்டிக்காரத் தேவர் வந்து கொண்டிருந்தார். அப்போது சின்னப்பாண்டி வீட்டு முன்னால் ஒரு சிறு கூட்டம். நடுவில் தலை குனிந்தபடி... நிற்கிற இளவட்டப்பயல்.

ஏதோ ஒரு பெண்ணுடன் சிநேகிதம். சேர்ந்து ஓடி விடத் திட்டம். திட்டம் சன்னமாய் நழுவிக் கொள்ள... இவன் சிக்கிக் கொண்டான். பிடிபட்ட மைனாவாக 'விலுக், விலுக்' கென்று விழிக்கிறான். ஆள் ஆளுக்கு சத்தம் போட்டுக் கண்டிக்கின்றனர். கோபமும் பாசமுமாய் அறிவுரைகள் சொல்கின்றனர்.

''மாமா மகா கிளி கணக்கா இருக்கா. மூச்சிக்கிட்டு ஜாம் ஜாம்னு குடும்பம் நடத்து. கிடங்கு மேடு வந்துட்டா, ஒறவுமுறைக கூட இருந்து கரையேத்திருவோம்லே?''

என்று காரியார்த்தமாக புத்திமதி சொல்கிற - அதையே அதட்டலும் அன்புமாக சொல்லுகிற - பலவகைச் சத்தக்காடு.

போய்க் கொண்டிருந்த தேவர்... போகிற வேகத் திலேயே... புரிந்து கொண்ட உணர்வில்... அவரும் வாயைத் திறந்தார்... ''ஏலேய்...'' என்றார்.

வண்டிக்காரத் தேவர் சவுண்டு கொடுத்தவுடன், எல்லாரும் மரியாதையில் மௌனமாக... மௌனமே ஒரு மரியாதையாகத் தோன்றி கௌரவிக்க... சவுண்டை ஏற்றினார், தேவர்.

''சின்னஞ்சிறிசுக... தூரதேசத்துலே ஆதரவுக்கு சொந்த பந்தமில்லாம என்னடா செய்வீக? உங்களுக்குள்ளே சண்டை சத்தம் வந்தா... யார் தீர்த்து வைப்பாக? ஆயிரம் ரெண்டாயிரம் தேவைப்பட்டா... யார் குடுத்து ஒதவுவாக? யாராச்சும் உங்களை அடிக்க வந்தா... யார் உங்களைக் காப்பாத்துவாக? எதுக்குடா... இந்தப் பொல்லாப்பு? பேசாம... பெத்தவுக சொல்லுற புத்திமதியைக் கேட்டு... மாமா மகளைக் கல்யாணம் பண்ணச் 'சரி'ன்னு சொல்டா... எல்லாரும் கூட நிப்பாக. நல்லதுலே பொல்லதுலேயும் கவசமா சொந்த பந்தங்க நிப்பாக. சாதி சனத்தோட ஒத்தாசை யிலே மேல் தளத்துக்கு முன்னேறிப் போகலாம்டா. கூறு பாடாடோ பெரியாளுக சொல்றதைக் கேட்டு நடடா...''

தாட்டியமான குரலில் கம்பீரமாக அதட்டி விட்டு, அதிகாரமாக அறிவுரை சொல்லி விட்டு... வண்டிக்காரத் தேவர் போய் விட்டார். அவருக்கு ஆயிரம் பாடு சோலிகள்.

பத்துநாள் கழித்து அவர் காதில் தாக்கல் விழுந்தது.

'சின்னப் பாண்டி மகன் கல்யாணத்துக்குச் சம்மதிச் சிட்டான். மாமா மகள் தான் பொண்ணு'

வண்டிக்காரத்தேவர் மனசுக்கு இசைவான தகவல். தானே சொன்ன அறிவுரையின் வழியில் நிகழும் நிகழ்வுகள்.

''நல்லாயிருக்கட்டும் அதுக...'' என்று மனசுக்குள் ஆசீர்வதித்து விட்டு... மாடுகளை பத்திக் கொண்டு, பாடுகள் பார்க்கப் போய்விட்டார்.

இன்றைக்கு விடிந்தவுடன் -

காதில் வந்து விழுந்த தீ.

கல்யாண வீடு ஜேஜே என்று கூட்டமும் கும்மாளமு மாய் - உறவுக்காரர்களும் உல்லாசமுமாய் குதூகலமாகப் பொங்கி வழிகிற தருணத்தில் -

அந்த இளவட்டப்பயல் - மாப்பிள்ளைப் பையன் - சொல்லாமல் கொள்ளாமல் எங்கோ ஓடிப்போய் விட்டா னாம். ஆசைப்பட்ட பெண்ணையும் விட்டுவிட்டு... தாலிக்காக காத்திருந்த மாமா மகளையும் கதற விட்டு விட்டு... ஓடிப் போய் விட்டான்.

வற்புறுத்தலுக்குப் பயந்து சம்மதித்திருந்த அந்தப் பயல், சம்மதமற்ற கல்யாணத்திலிருந்து தப்பித்தோடி விட்டானாம்!

யாரோ... எவனோ... அவன். எவனோ சின்னப்பாண்டி யின் மகன். அவனது ஓட்டம், இவரை என்னத்துக்காக இச்சிலாத்திப் படுத்தவேண்டும்?

ஆனால்... தாக்கல் காதில் விழுந்த கணத்திலிருந்து இவருக்கு மனசே சரியில்லை.

தன்னை யாரோ செருப்பால் அடித்துவிட்ட மாதிரி, அவமானமாக உணர்ந்தார்.

''நீயெல்லாம் ஒரு பெரிய மனுசனாய்யா? எளவயசுப் புள்ளைக மனசு என்னய்யா தெரியும், ஒனக்கு?'' என்று அந்தப் பயல், காறித்துப்புகிற மாதிரியோர் பிரமை.

அவனது ஓட்டம், இவரது அறிவுரைக்கு நிகழ்ந்த நிராகரிப்பு மட்டுமல்ல... இவரையே காலால் எற்றுகிற எதிர் சாடல்.

'எஞ்சொல்லை காலாலே எத்திட்டு ஒரு எளவட்டப் பய ஓடிட்டான்' என்று யாரிடம் சொல்ல? எப்படிச் சொல்ல? என்ன என்று சொல்ல? நினைத்தாலே கேவலமாக இருக்கிற இழிவை எப்படிச் சொல்ல? வெட்கக் கேட்டுக்கு என்ன வெளிச்சம் வேண்டிக்கிடக்கிறது? ஊமையன் கண்ட கனாவை யாரிடம் எப்படிச் சொல்ல? அதிலும், அவமானக்கனா.

அதுமட்டுமல்ல.

வண்டிக்காரத்தேவர் கண்டது கழியதுகளை நினைத்து, மனசை திசை திருப்ப முயற்சித்தாலும்... மனசின் ஆழத்திற்குள் அந்த இளவட்டப் பயலின் முகம். உர்ரென்று உறுத்துப் பார்க்கிற பார்வை.

இவரது மனசாட்சியின் கழுத்தில் துண்டைப் போட்டு, முறுக்கி, வெடுக்கென்று இழுக்கிற பார்வை. குற்றஞ் சாட்டுகிற தொனியில் அவன் கேட்கிற பார்வை.

''ஒறவு மொறையை ஒதுக்கி வைச்சுட்டு... நீரும், கண்ணாத்தாவும் ஒண்ணாச் சேர்ந்து, ஒழைப்பாலே, அன்பாலே ஓகோன்னு ஆகியிருக்க முடியுதே... நீரே, என்னை மட்டும் 'ஒறவு மொறை காலடியிலே வுழுந்து கிட'ன்னு சொல்லலாமா? ஞாயமா? ஒமக்கே இது உத்தமமா?''

இப்படியான கேள்விக் குரல் உள்ளிருந்து ஒலிக்கிற பிரமை. ஓங்காரமாக அலறுகிற உணர்வு. ஓர் இளைஞனின் நெருக்கடியான தருணத்தில்... உதவி செய்ய வேண்டியவர். உதவி செய்யாவிட்டாலும், உத்திரவம் செய்யாமலாவது ஒதுங்கியிருக்க வேண்டும்.

உள் நுழைந்து, மனசுக்கு விரோதமாகப் பேசலாமா? நியாயமில்லாததைச் சொல்லலாமா? மனசுக்குப் பட்ட உண்மையை மாற்றிச் சொல்லலாமா? நியாயமா?

இந்த உணர்ச்சி தான் அவரைப் பாடாய் படுத்துகிறது. ஆயிரத்தெட்டு சோலிகளை வைத்துக் கொண்டு அலைகிற ஆளுக்கு எதுக்கு இந்த மணியம்? வாயைப் பொத்திக் கொண்டு போயிருக்க வேண்டியதுதானே?

வாயைத் திறந்து யார் பேசச் சொன்னது? செருப்படி பட்டு, மானங்கெட்டு நிற்கணுமா?

இந்தக் குற்ற உணர்ச்சியும், கோபமும் தான் அவருக்கு... அவர் மீது. மனசுக்குள் குத்திக்கொண்ட முள்ளாக, அந்த இளவட்டத்தின் பார்வை.

மாடுகள் தார் ரோட்டில் தன் போக்கில் போகின்றன. கார் லைட் வெளிச்சம் வந்தால்... இடத்தை மாடு தானாக மண் ரோட்டிற்கு இறங்கிக் கொள்ளும். வெளிச்சம் கடந்து, இருட்டு சூழ்ந்தவுடன், வலதீதை மாடு தானாகவே இழுத்துக் கொள்ளும்.

எல்லாம்... வருஷக் கணக்கான பழக்கம்.

தேவர் நினைவு மயக்கத்திலேயே இருக்கிறார். உறக்கம் போலவும், விழிப்பு மாதிரியும் ஓர் இடைப்பட்ட நிலை. வண்டிப் பைதாவின் நெறுநெறு சத்தம். வண்டிக் குடங் களின் 'தடக், கடக்' சத்தம். குளம்புகளின் அதிர்வுச் சத்தம்.

பனங் காடைகளின் வீறிடல். பின்னரவின் இருட்டு. சிந்திச் சிதறிக் கிடக்கிற சோற்றுப் பருக்கைகளாக நட்சத்திரங்கள்.

வண்டி கீழ ராஜ குலராமனைத் தாண்டி விட்டது. சங்கம்பட்டி வந்து கொண்டிருக்கிறது.

தேவர், ஏதோ அரவம் கேட்டது போலிருக்கிறதே என்று நினைத்தார். கண்ணையும், மனசையும் திறந்து, உஷாராகக் கவனித்தார். கூட்டு வண்டிக்குள் தான், ஏதோ அரவம். தகர டின்களும், கூடைகளும் இடம் மாறுகிற குழப்ப சத்தம்.

படுத்த நிலையிலேயே தலையை மட்டும் தூக்கிப் பார்த்தார். இருட்டின் அடிவயிற்றுக்குள்ளிருந்து வருகிற மாதிரி... தூரத்தில் தெரிகிற தீப்பந்தங்கள். ஐம்பதுக்கு மேலிருக்கும் தீப்பந்தம்.

கோபமும் குமுறலுமான கூப்பாடுகள், தூரச்சத்தமாக.

''விடாதேடா... புடிச்சு வெட்டுடா...''

''தப்பவுட்டுராதீகடா... ஓடுங்கடா... நம்ம மானம் போயிரும்டா...''

''தறுதலைக் கழுதைகளை தப்ப விட்டுராதீகடா. சாதி மானம் நாறிப் போகும். புடிச்சு... தலைகளை நறுக் கிரணும்டா''

''குட்டி நாய்க குதிச்சோடுதுடா... புடிச்சு வாலை நறுக்குங்கடா''

காட்டுக் கூச்சல் கிட்டத்தில் வருகிறது. கூவல் காடு களும், கோபக் கொந்தளிப்புகளும் கொலைப் பசியோடு நெருங்குகின்றன. தீப்பந்தங்களின் ஜ்வாலைகள் அசைவது தெரிகிற அளவுக்கு, பக்கமாய் நெருங்குகின்றன. தீயின்

தகதகப்பில் தெரிகிற கறுத்த மனிதர்கள். கம்பும், வேல் கம்பும், வீச்சரிவாளுமாக மனிதக் கோபங்கள். தீப்பந்த வெளிச்சத்தில் வேர்வை மினுமினுப்பு.

மடியிலிருந்த பொடி மட்டையை எடுத்து, வாயை நெறித்து திறந்தார். பொடியை அள்ளி... கடைவாய்ப் பல்லிலும், அடிப் பல்லிலும் வைத்து இழுவினார். உதடு களை இறுகப் பொத்திக் கொண்டு 'ஊ' வென்று ஊதிக் கொண்டார். பொடியின் சுறுசுறுப்பில், சுள்ளென்று விழித்துக் கொள்கிற மனசு.

நெருங்கி வந்த தீப்பந்த மனிதர்கள். குமுறலும் ஆங்காரமுமாய் இவரிடம் கேட்டார்கள்.

''இங்குட்டு... ரெண்டு நாய்க ஓடியாந்துச்சா?''

வண்டியைச் சுற்றி தீப்பந்தங்கள். கோபத்தின் கூச்சல். ஆயுதங்களின் தடதடப்பு.

''ஆணும் பொண்ணுமா... ரெண்டு சிறிசுக தானே?''

''ஆமா... ஆமா... ஆமா...''

''இந்தா... இங்குட்டாமத்தான் வேலிக் காட்லே ஓடு தாக. அப்பவே போயிட்டாகளே... ஓடுங்க... ஓடுங்க... வெருசா ஓடுங்கா...''

ஓடுகிற தீப்பந்தங்கள். முன்னோக்கிப் பாய்கிற ரத்தப் பசி கொண்ட ஆயுதங்கள். இருளின் ஆழத்திற்குள் ஓடி மறைந்து விட்ட கோப இரைச்சல்கள்.

வண்டி... சத்திரப்பட்டி, சமுசிகாபுரத்தைத் தாண்டி, ஜெயராம் மில் பக்கமாக போய்க் கொண்டிருந்தது. எச்சிலை புளிச்சென்று துப்பிவிட்டு வண்டிக் கூட்டின் இருட்டுக்குள் கழுத்தை திருப்பினார்.

''வாங்க வெளியே. ராசபாளையம் வந்தாச்சு.'' பயந்து நடுங்கிப் போய் முன் வருகிற இரு நிழலுருவங்கள்.

''இங்க பாரு... ஒழைப்பை நம்புறவனுக்கு எல்லா ஊரும் நம்ம ஊரு தான். எல்லா மனுசரும் நம்ம ஒறவுமொறை தான். நீங்க ரெண்டு பேரும் அன்பாலே மட்டுமே வாழ்ந்தீகன்னா... எந்த தூர தேசத்துலேயும் ஒழைச்சு ஒத்துமையா வாழ்ந்துர முடியும். நல்லபடியா வாழ்ந்து காட்டுங்க...'' வண்டிக்காரத்தேவர் கயிறுகளை பிடித்து இழுத்து, வண்டியை நிறுத்தினார். ரெண்டு இளசுகளும் இறங்கிக் கொண்டன. அவரை கையெடுத்துக் கும்பிடுகிற இரண்டு புறாக்கள். சாதி கடந்த மன அன்பில் சங்கமித்த புறாக்கள்.

வண்டி, வாழ்க்கையைப் போல முன்னோக்கி உருண்டது. போகிற அந்தப் புறாக்களின் முதுகுகளையே பார்த்துக் கொண்டிருந்த தேவருக்குள்... இளவயசு ராக்கனும், கண்ணாத்தாவும் கைகோர்த்துப் போவதைப் போன்றதோர் பிரமை.

செருமிக் கொண்டார், சுதாரிப்பாக. ஒரு போரில் ஜெயித்தவராக... மீசையை நீவிக் கொண்டார்.

ஆழ் மனசில் தைத்த முள்ளாக உறுத்திக் கொண்டிருந்த அந்த இளவட்டப் பயலின் முள் பார்வை, இப்போது இல்லை.

வாலைச் சுழற்றிக் கொண்டு நடையை எட்டிப் போட்டது, வாழ்க்கை.

**- புதிய காற்று மாத இதழ்**
*ஜனவரி 2004*

# மனச்சலவை

பவளவிழா முத்திரைப் பரிசு பெற்ற கதை.

''வா! வா... வெருசா... வா'' மாடத்தியை அதட்டிக் கொண்டே 'வேகுவேகெ'ன்று நடக்கிறேன்.

டவுன் பஸ் வர்ற நேரம். வந்துட்டா... கூட்டம் சள்ளை பறியும். உக்கார ஸீட் கிடைக்காது. நிக்கவே இடம் இருக்காது.

எனக்கு ஸ்டாண்டிங்னா... முடியாது. வாதம் வந்த முழங்கால் கடுக்கும். இடுப்பும் தொடைச்சதையும் ரண மெடுக்கும். தாங்கவே முடியாது. உயிர் வாதை.

''இந்தா... வந்துருச்சு... எங்க ஊரு பஸ்ஸு.''

வந்து மொய்க்கிற ஜனக்கூட்டத்துக்கு முந்தி நான். இடது ஜன்னல் வழியாக எனது மேல்துண்டை ஒரு ஸீட்டில் வீசியெறிந்தேன். இறங்குவதற்குச் சிரமப்பட்ட ஒருத்தியிடம்...

''யம்மா... யம்மா... துண்டை ஸீட்லே விரிச்சுப் போட்டுரும்மா. ரெண்டு பேரு உக்காரணும்...''

சின்ன வெறுப்போடு பார்த்த அந்தப் பெண், துண்டை ஸீட்டில் இழுத்துப் பரப்பினாள். ரெண்டு பேர் உட்காருகிற ஸீட்.

யப்பாடி... நிம்மதியாய்ப் போச்சு... உக்காந்துக்கிட லாம்... இந்தக் கவலை இனிமே இல்லை.

ததும்பி வழிகிற பஸ். ஜனம் பிதுங்குகிறது. ஏறி உட்கார்ந்து கொண்டோம். பஸ்ஸுக்குள் மனித வெக்கை. வியர்த்துக் கொட்டுகிற இறுக்கம். வெயில் பட்ட பஸ் தகரத்தில் வெப்பத் தகிப்பு, மூச்சுத் திணறல். பஸ் நகர்ந்து, வெளிக்காற்று மோதினால்... உயிர் வரும்.

உறுமலோடு புறப்பட்ட பஸ். கால் வைக்க இடமில் லாமல் தத்தளிக்கிற ஆட்கள்.

பத்மா ஆஸ்பத்திரி ஸ்டாப். ஏறுகிற நாலைந்துபேர். கையில் டவலில் சுற்றிய பத்து நாள் மழலையை ஏந்திக் கொண்டு ஓர் இளந்தாய். அவளால் நிற்க முடியவில்லை. கம்பியையும் பிடிக்க இயலவில்லை. பாலன்ஸ் பண்ண முடியாமல் தடுமாறுகிறாள். டவலுக்குள்ளிருந்த புதிய ஜீவன் வினோத குரலில் அழுகிறது.

அந்த கைப்பிள்ளைக்காரி என் பக்கத்தில்தானா வந்து நிற்கவேண்டும்? வேறு இடமில்லையா? வேற யாராச்சும் எந்திருச்சு, எடம் தரக்கூடாதா?

ம்ஹூம்...

என் முகத்தையே பார்க்கிற அந்தப் பெண். புதிய தாய். பச்சை உடம்பு. துல்லியமாய்த் தெரிகிற அதன் பலவீனம்.

வேறுவழியேயில்லை.

புகலற்ற இயலாமையோடும் மனப்பொருமலோடும் எழுகிறேன். யார் யாரையோ குருட்டாம்போக்கில் திட்டித் தீர்க்கிறேன். என் முகத்தின் கோபச் சிடு சிடுப்பு. அங்கும் இங்குமாய் கடுப்புடன் பார்க்கிறேன்.

'நல்ல மனசோட எந்திரிக்கலாம்லே?' என்று கண்டனப் பார்வை வீசிய மாடத்தி, அந்த இளந்தாயை மென் சிரிப்புடன் பார்த்தாள். ''உக்காரும்மா'' என்று பரிவுடன் மென்குரலில் சொல்லி, இடம் தந்தாள்.

எனக்கு கடுப்பு என்றால்... கடுப்பு, அப்படி கடுப்பு. 'ச்சீ' என்று வந்தது. மொத்த பஸ்ஸையும் சுற்றிப் பார்த்து, அத்தனை பேரையும் மானாங்காணியாக வைது தீர்த்தேன். மனசுக்குள்.

வேலாயுதபுரம் ஸ்டாப். இரைச்சலோடு நிற்கிற பஸ். கையில் ஏந்திய மழலையோடு மெள்ள எழுந்தாள்.

நான் மாடத்தி பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன்.

கீழே இறங்கியவுடன் -

தேடி என்னைப் பார்க்கிற அந்தப் பெண். அந்த மென்பார்வை. பார்வையின் குளிர்ச்சி. நன்றியில் குழைந்த மனசைப் பேசுகிற அந்தப் பார்வையின் இதம்.

நிலைகுலைந்து போனேன்.

அந்த மென்மையான நன்றிப் பார்வை.

என் கோபச் சிடுசிடுப்பை மட்டுமல்ல, என் மனசின் எல்லாக் கசடுகளையும் கழுவி விட்ட மாதிரி இருந்தது.

**- ஆனந்தவிகடன்**

*6-7-2003*

# சிதைவுலகம்

கருப்பையாவுக்குக் கண்ணுமுழி பிதுங்கியது, கைக்கும் மெய்க்கும் காசில்லை. இந்த மாசத்தை நகர்த்த வேண்டு மென்றால், ரெண்டாயிரம் இல்லாமல் நடக்காது. ரெண்டா யிரம் ரூபாய்க்கு எங்க போக? என்ன வழி? எவரிடம் கேட்க?

கண்ணைக் கட்டி காட்டில் விட்டமாதிரி திகைப்பாக இருந்தது. முன்னுக்கும் பின்னுக்கும் நகர முடியாத முட்டிப்பு, மூச்சுத் திணறல்.

உழவடிக்கணும். பல் கலப்பை உழவு. டக்கர்காரரிடம் கடன் சொல்லிக்கலாம். பிரச்சனையில்லை. சமாளித்துக் கொள்ளலாம்.

உழவில் போட ரெண்டு மூடை டி.ஏ.பி. வேணுமே... விதைவாங்க பணம் வேணுமே. அருகெடுக்க ஆள் வேணுமே. விதைப்புக்கு ஆள் வேணுமே. ஆள்களுக்குக் கொத்து தருவதற்கு பணம் வேணுமே!

கருப்பையாவுக்குள் கவலை ஈக்கள். புண்ணைச் சுற்றி மொய்க்கிற ஈக்களாக சுற்றிச்சுற்றி வருகிற நினைவுகள். வெளியேறிப்போகாத வீட்டுப்புகையாக மனசுக்குள்ளேயே மருகி மருகிச் சுழன்று, சுழற்றடிக்கிற நினைவுகள்.

ஊரெல்லாம் ஒரு 'ரவுண்டு அடித்தான், மனசுக்குள். ஆட்களிடமெல்லாம் 'கைமாற்று, கால்மாற்று'க்குத் தலையைச் சொரிந்தான். கெஞ்சிக் கூத்தாடிப் பார்த்தான்.

''தாய் தவுட்டுக்கு அலைஞ்சாளாம். புள்ளை இஞ்சிப் பச்சடிக்கு அழுதானாம். அதுமாதிரியில்லேயிருக்கு, ஒம் பேச்சு''

''கைமாத்துத்தானே கேட்டேன். ரெண்டாயிரம் தானே கேக்கேன்?''

''நாங்களே நூறு எரநூறுக்கு நூலாம்படையையாகத் தவிக்கோம். நீ ரெண்டாயிரம் கேக்கே? கூத்துதான்''

எல்லாருமே கையை விரித்துவிட்டனர்.

ஆவணி மாசத்துக் காலைவெய்யில். கிறங்கடிக்கிற காலைவெய்யில். கொக்கு நோய்கண்ட கோழி கணக்காக குறாவிப் போய் வந்தான், கருப்பையா. அடிமனசின் வருத்தங்களில் ஊறி நனைந்த நினைவு, பெருமூச்சான இரைச்சலிட்டு வெளிவந்தது. மேல் துண்டையெடுத்து திண்ணைத் தூசியை தட்டிவிட்டு சோர்வாகத் துவண்டு உட்கார்ந்தான்.

''காப்பித் தண்ணி இருக்கு. சுட வைச்சுத் தரட்டா?''

உணர்வறிந்த பரிவாக வருடுகிற மனைவியின் மயிலிறகுக்குரல்.

''ம்... குடு''

''போன காரியம் காயா, பழமா?'' உருவமற்று வருகிற குரலின் விசாரிப்பு. அகம் - புறம் எல்லாம் அவர்களுக்குள் பொதுதான்.

''காய்தான்'' தளர்ந்து குலைந்த இவனது குரல் நோயுற்றிருந்தது.

''அப்ப... ஒண்ணு பண்ணுங்க...''

'' சொல்லு...''

''எங்க அக்கா வீட்டுக்குப் போங்க. மச்சான்கிட்டே பேசிப் பாருங்க... குடுத்தாலும் குடுப்பாரு...''

''எப்புடி?''

''போனமாசம் காதுகுத்துக்கு அய்யனார் கோவிலுக்குப் போனோம்லே,''

''ம்?''

''அப்பவே எங்க அக்கா கிட்டே சொல்லி வைச்சிருக்கேன்...''

''என்னன்னு?''

''ஆவணிமாச வெதைப்புச் செலவுக்குக் காசுபணம் கொஞ்சம் தேவைப்படும்னு''

''ம்?''

'' தயார்பண்ணி வைக்கேன், தேவைப்பட்டா... வந்து வாங்கிட்டுப் போன்னு அக்கா சொன்னா...''

அவனுக்குள் ஊற்றெடுத்த தெம்புணர்ச்சி. தளர்ந்து குலைந்திருந்த குரலுக்கு உயிர் வந்தது.

''அப்ப... சோத்தை வை. சாப்புட்டு சைக்கிள்லே போய்ட்டு வந்துருதேன்...''

''பல்லைத் தேய்ங்க''

வழி கிடைத்தவுடன், மனித நதி வாழ்க்கை நடை போட்டது. செயல்களில் ஒரு துரிதம். காலுக்குச் சக்கரம் கட்டிய மாதிரி ஒரு பரபரப்பு. மனசுக்கு றெக்கை முளைத்தது. உள்ளுக்குள் விசிலடிக்கிற மன உல்லாசம்.

தாழ்வார நிழலில் குப்பை கூளத்துக்கிடையில் கிடந்த சைக்கிள். தூக்கி இழுத்து... வீட்டுமுன் ஸ்டாண்டு போட்டான். பழைய துணியையெடுத்து பருவெட்டாகத் துடைத்தான்.

வேட்டியை மாற்றி, சட்டையைப் போட்டு, காலில் செருப்பை மாட்டி சைக்கிள் கிட்டத்தில் வந்து நின்றான்.

''அப்ப... நா போய்ட்டு வரட்டா?''

வாசலில் நின்று ஆறுதலாகப் பார்க்கிற லட்சுமி.

''போய்ட்டு வாங்க...''

ஸ்டாண்டைத் தட்டிவிட்டு, பெடலில் காலை வைத்து ஏறி சீட்டில் அமர்ந்தான். மிதிக்க மிதிக்க சைக்கிள் செக்காக நின்றது.

ஏறுவெய்யில் மூஞ்சியில் ஊசியாகக் குத்துகிறது. கன்னக் கதுப்புகளில் காந்தல். ஊரைக்கழித்தால் வேலிக் காடு. வண்டிப்பாதையில் சைக்கிள் உருண்டது. மாரி மூலைக் காற்று சுழன்று சுழன்று அடிக்கிறது. சைக்கிளை உருளவிடாமல் மறிக்கிறது. முன்வீலை மடக்குகிறது. ஆண்டில்பாரை அழுத்திப்பிடித்து, மூச்சுப்பிடித்து மிதிக்க வேண்டியிருக்கிறது.

''எட்டு மைல் தூரம்... போய்ட்டு வர்றதுக்குள்ளே கிண்ணி கழண்டுரும் போலிருக்கே...''

கருப்பையா வலையபட்டியைத் தாண்டினான். கம்மாப் பட்டியை நெருங்கினான். மதினி ஊருக்குப் போவதற்குள் மதியமாகிவிட்டது.

இருந்து சாப்புட்டுட்டு காலையிலே போகும்படி செய்த உபச்சாரத்தை யெல்லாம், சிரித்து மழுப்பினான் கருப்பையா.

''உழவும் வெதைப்பும் காத்துக்கெடக்கு. வெருசாப் போகணும்'' என்று ஆலாய்ப் பறந்தான்.

பச்சைத் தண்ணீர் மட்டும் ஒரு செம்பு வாங்கி, தகை தீரக் குடித்தான். பணத்தை வாங்கி அண்டர் வேர் பையில் வைத்துப் பத்திரப்படுத்திக் கொண்டான்.

''அப்ப... மயினி, போய்ட்டு வரட்டா?''

''ம்... லட்சுமி நல்லாருக்கா இல்லே? புள்ளைக நல்லா யிருக்குக இல்லே?''

''நல்லாயிருக்காக...''

''தீயா கொளுத்துற வெய்யில்லே போகணும்ங்குறீக வெயில் தாழப்போகலாம்...''

'' வெய்யிலைப் பாத்தா வேலை நடக்காது. போய்ட்டு வாரேன், மயினி''

வந்த மாயத்தில் புறப்பட்டுவிட்டான், கருப்பையா. சைக்கிள் ரூபாய் கிடைத்துவிட்ட உற்சாகத்தில் றெக்கை கட்டிப் பறந்தது. தள்ளுகாற்று. முதுகுச்சட்டை வேர்வை யில் அப்புகிறது. பிடறி வேர்வையைக் காற்று உண்கிறது.

லட்சுமியை மாதிரித்தான் மயினியும். தங்கமானவுக. கொஞ்சம் கூட பிகுபண்ணவில்லை. கிராக்கி காட்ட வில்லை. டக்கென்று தூக்கித்தந்த வேகம். பணம் தந்த மனச்சுத்தம்.

மதினியைப் பற்றிய பூ நினைவுகளின் மலர்ச்சியும், வாசப்படர்வும்.

சைக்கிள் ஆலங்குளம் வந்தது. மதியம் திரும்பி விட்டது. வெள்ளை வெயில். காலடி நிழல் கிழக்கில் நகர்ந்து விட்டது.

வயிறு 'கபா, கபா' வென்று பசித்தது. எலும்புகளின் ரணம். முழுங்கால்களின் குடைச்சல். 'சித்தே ரெஸ்ட் எடுத்துட்டுப் போனாத் தேவலை' என்கிற உடலயற்சி.

'என்னத்தை யாச்சும் வாங்கி, எரிகிற உலையில் போடு' என்கிற வயிறு.

முக்குரோட்டில் ஏகப்பட்ட கடைகள். லோடு ஏற்றிய லாரிகள். ஜனநடமாட்டம். ஒரு கடை முன்னால் வண்டியை நிறுத்தினான், கருப்பையா.

தட்டு நிறைய மஞ்சள் பொன்னிறத்தில் உளுந்து வடை. ரெண்டு எடுத்து பிய்த்து உள்ளே தள்ளினான்.

''ஒரு டீ குடப்பா...''

பிய்த்துப் போட்ட வடைத்துணுக்குகளை ஊற்றிய டீத்தண்ணீர் ஒன்றுசேர்த்தது. வயிறு நிறைந்துவிட்ட உணர்வில் ஒரு மன நிறைவு. ஒரு தெம்பு வந்த மாதிரியிருந்தது. தேகத்தின் அயற்சி சற்று மட்டுப்பட்ட மாதிரித் தோன்றியது.

புறப்பட ஆரம்பித்து, சைக்கிள் ஸ்டாண்டு கிளிப்பை தட்டி விட்டபோது...

ஆண்டில் பாரைப் பற்றிய ஒரு கை.

''மா மோய்...''

செந்தட்டிப் பயல். கந்தலாகக் கசங்கியிருந்தான். அழுக்கு வேட்டி. பிசுக்குச் சட்டை. காய்ந்த தலை. கறைபடிந்த பல். பத்துநாள் தாடி.

கருப்பையாவின் அக்கா மகன். எட்டாப்பு பெயில். காட்டுவேலைக்கு வளையாத உடம்பு. அம்மாவிடம் தட்டிப் பறித்துத் தின்று தறுதலையாகத் திரிந்தான். களவுக்குக் கைநீள... ஊரில் பலதடவை இவனை மரத்தில் கட்டிப் போட்டனர். எந்நேரமும் தண்ணி.

அம்மா சாவுக்குப் பிறகு... யாதும் ஊராகி விட்டான். மறை கழன்ற கேஸாகி... அரை மெண்டலாக ஊர் ஊராகத் திரிந்தான்.

இடையில்... அவனைப் பிடித்து நிறுத்தி... வேலைகளில் வசக்கி... ஒரு கல்யாணமும் பண்ணி வைத்தனர்.

ஒரு பிள்ளையை பெற்றுப் போட்டு எவனுடனோ அவள் ஓடிப்போக, பிள்ளையும் செத்துப் போக... ஆணி வேரிழந்த பயிராகிவிட்டான். காற்றில் அற்றலைகிற சருகாக.... அவன்.

பாவம்... சின்னப்பயல்.

''என்னடா... செந்தட்டி...''

''மாமா... இங்கதான் திரியுதேன்''

''வடை திங்கியா? டீ குடிக்கியா?''

''அதெல்லாம்... வேண்டாம் மாமா... ஒரு 'ஆஃப்'புக்கும் நாலு புரோட்டாவுக்கும் ஏற்பாடு பண்ணு... மாமா...''

''அம்புட்டெல்லாம் நம்மகிட்டே ஐவேசு இல்லேப்பா... வடை டீ வேணுமின்னா வாங்கித்தாரேன்?''

அவன் விடாமல் நச்சரித்தான். கருப்பையா ஒரேயடியாக மறுத்துவிட்டு... பதினைந்து ரூபாயை அவனிடம் வீசியெறிந்துவிட்டு ''தொலைஞ்சுபோ... சனியனே'' என்று சைக்கிளை எடுத்தான்.

செந்தட்டிக்குச் சண்டாளமாய் வந்த கோபம், ''தாய் மாமனா? நாய் மாமனா? இவனெல்லாம் ஒரு மனுசனா? கதி கெட்ட வெறும்பய....''

கூச்சல் போட்டு வசை பாடுகிறான். சிதைந்து போன வாழ்வின் அவலமாக அவனது குரல். உடைந்து சிதறி, சூன்யமாகிப் போன ஒரு கனவின் அழுகையாக - வெடிப்புக் குரலாக - அந்த வசவுகள்... கருப்பையாவுக்கு பாவமாக இருந்தது. ''அக்கா மகன் இப்புடிச் சீரழிந்துவிட்டானே'' என்கிற வருத்த உணர்ச்சி. கருணையின் துடிப்பாக வெளிப் படுகிற பரிதாப உணர்வு.

அக்காவைப்பற்றியும், அவளது வம்சச் சூன்யம் பற்றியும் கவலைப்படுகிற எண்ணங்கள், ஆவணி மாசத்து வெய்யிலாக மனசை வாட்டி வதைத்தது.

சைக்கிள் கம்மாப்பட்டியைத் தாண்டுகிற போது, சக சைக்கிள்காரன் ஒருவன் பேச்சுத்துணைக்குச் சேர்ந்து கொண்டான். அவன் வலைய பட்டிப் பையன்.

பேசிக்கொண்டே மிதித்த சைக்கிளின் வேகத்தில் செந்தட்டி தூரம் தூரமாக பின் சென்று, புள்ளியாகி மறைந் தான். தகிக்கும் வெய்யில். லேசான காற்று. ரோட்டோ ரத்தில் தாறுமாறாகச் சாய்ந்து நெளிந்துகிடக்கிற சைக்கிள். பக்கத்தில் கொதிக்கும் வெய்யிலில் மல்லாக்கக் கிடக்கிற ஒரு வாலிபன், அண்டர்வேர் தெரிய மடித்துக் கட்டிய வெள்ளை வேட்டி உருவிக் கிடந்தது. கசங்கி அழுக்காகிக் கிடந்த சட்டை, எல்லை தாண்டிய குடி போதை. நிதானம் செத்து, நிலைகுலைந்து, பிரேதம் போல கிடக்கிற ஆள்!

நின்றான் கருப்பையா. கூட வந்தவனைப் பார்த்தான்.

கருப்பையாவுக்கு மனசு கேட்கவில்லை. செந்தட்டி போல ஒரு வாலிபன், பாவம், இவனுக்குள் என்ன சோகமோ? என்ன விதமான அவலமோ?

''வேலிக்காடா கெடக்கு, பாம்பு கீம்பு கடிச்சிட்டாலும் கடிச்சிரும்... தூக்கி ஒரு எடத்துலே சேத்துருவம்.''

''குடிகாரன் காரியம்... வேற ஏதாச்சும் வம்புகிம்பு வந்து சேர்ந்தாலும் சேர்ந்துரும்.''

''அதெல்லாம்... வராது. நாம நம்ம மனச்சாட்சிக்குப் பொதுவா நடப்போம். அதுக்கு மேலே வர்றது வரட்டும்.''

அரைமனசாக அந்தப் பையன் சம்மதிக்க... இருவருமாகச் சேர்ந்து அவனையும், அவன் சைக்கிளையும் தூக்கி... பக்கத்து ஊரில் சேர்த்து விட்டு... பயணப்பட்ட போது...

கருப்பையாவுக்குள் ஒரு திருப்தி. ஒரு நல்லகாரியத்தை செய்த நிம்மதி. முகம் தெரியாத ஒரு மனிதனுக்கு உள்நோக்கமற்று உதவி செய்ததில்... மனசே ஒரு பூ மாதிரி ஆகியிருந்தது.

**ம**றுநாள்.

கலிங்கப்பட்டிக்கு சைக்கிளில் போய், டி.ஏ.பி. மூடைகளும், விதையும் வாங்கிக் கொண்டு வந்து சேர்ந்திருந்தான், கருப்பையா.

மூடைகளைச் சுமந்து உள்ளே கொண்டு போய்ச் சேர்த்ததில் வந்த மூச்சிரைப்பு, இளைப்பு. உடம்பெல்லாம் தண்ணீர் அள்ளி ஊற்றிக் கழுவி துடைத்துவிட்டு...

''ஹ... ப்பாடா!'' என்று திண்ணையில் உட்கார்ந்த போது, ஒரு வேலையை முடித்த வெற்றிப் பெரு மிதம். தேகக் களைப்பை மீறிய பூரிப்பு. சந்தோஷத் ததும்பல். சந்தோஷக் கிறுகிறுப்பில் அப்படியே மெல்லக் கண்களை மூடினான். பெருமூச்சுவிடுவதில் கூட ஒரு பரவச உணர்வு.

''அண்ணாச்சி...''

கண்ணைத் திறந்தால், எதிரில் நேற்றைய வாலிபன் . போதை வெறியில் நிலைகுலைந்து தாறுமாறாக வெயிலில் கிடந்தவன்.

''என்னய்யா?''

''நேத்து நீங்கதானே... என்னை... ?''

''ஆமாம். அதுக்கென்ன?''

''நல்ல காரியந்தான் பண்ணுனீக. என் சட்டைப் பையிலே, ஆயிரத்து எழு நூத்தி நாப்பது ரூவா வைச்சிருந்தேன். அதையும் குடுத்துட்டீகன்னா... ரொம்ப நல்லதாப் போயிரும்''

''என்னது? ரூவாயா? நாங்க பாக்கலியே...''

''என்னைத் தொட்டுத்தூக்கிக் கொண்ணாந்த உங்களைத் தவிர... வேறயாரு அந்த ரூவாயை எடுத்துருக்க முடியும்?''

கருப்பையாவுக்குள் ஈரக்குலை நடுங்கியது. உயிரின் ஆணிவேர் வரைக்கும் அதிர்ந்து போனான்.

''பாம்பு கீம்பு கடிச்சிராம காப்பாத்துனீக'' என்று கையெடுத்துக்கும்பிட்டு நன்றி சொல்லிவிட்டுப் போக வந்திருக்கிறான் என்று நினைத்திருந்தவனுக்குள்... இறங்கிய பேரிடி.

நல்லதுக்குக் காலமில்லையா? ஒதுங்கி வந்திருந்தால், வம்பு தும்பு இல்லாமற் போயிருக்குமா? இரக்கப்பட்டு நெருங்கியவனுக்கு எடுத்துச் சுமந்தவனுக்கு இந்தத் தண்டனையா? இதென்ன... காலத்தின் கோலமே இதுதானா?

செந்தட்டி போன்று சிதைந்து போனவர்களின் உலகம் ஓட்டைத்திருவோடாகத்தான் இருக்குமா? பதினைந்து ரூபாய் தந்தவனுக்கு வசவுகளும் இழிவுகளும் தானா?....

மதினிகள் இருக்கிற உலகத்தில் செந்தட்டிகளும் உலவு கிறார்களா? பயிர்களுடன் களைகளுமா? இரண்டும் வயல் களின் இயல்பா? களைகள் களைந்தால், மதினிகள் நிறைந்த விளை நிலமாகுமா உலகம்?

கருப்பையாவுக்கு கண்ணு முழிபிதுங்கியது. கண்ணைக் கட்டி காட்டில் விட்ட மாதிரி திகைப்பாக இருந்தது. முன்னுக்கும் பின்னுக்கும் நகர முடியாத முட்டிப்பு. மூச்சுத்திணறல்.

அவன், 'காச்,மூச்' சென்று கத்த, கருப்பையாவும் கோபம் கோபமாகக் கூப்பாடு போட ... ஒரே 'கசமுசா'வாகி... தெருவே கூடி 'என்ன, ஏது' என்று ஓடிவர... கருப்பையா அவமான அசிங்கத்தில் குன்றிக் கூசிப்போக....

அப்புறம் -

அது ஒரு தனிக் கதைக்குரிய சண்டைக் கூத்தாயிற்று!

**- ஓம் சக்தி தீபாவளி மலர்**
*2003*

★★★

# மின்சாரப்பூ

## 1

விடிந்த நேரம் நல்ல நேரமாகத் தோன்றியது ராசாமணிக்கு. இன்றிலிருந்து எல்லாமே நல்லபடியாக நடக்கும் என்று மனசுக்குள் ஒருபட்சி சொல்கிறது. எடுத்த காரியம் எல்லாமே தொடுத்து முன்னேறி, கை நிறைய பலன்களை குவிக்கும் என்ற நம்பிக்கை நிறைந்த மனநிலை.

மன ஆணிவேரின் அடி நுனியில் நீர்ச்சுனை பட்ட மாதிரியோர் குளிர்ச்சி. மனசெல்லாம் பூத்த மாதிரியோர் இறகு வருடல்.

உறக்கச் சடவை கழுவித் துடைத்த மன மகிழ்வு.

எழுந்து வெளியே வந்த ராசாமணி, கைலியை மடித்துக் கட்டிக் கொண்டான். செம்புத் தண்ணீரில் வாயை கொப் பளித்து, முகத்தை கழுவிக் கொண்டு மேல் துண்டால் அழுந்தத் துடைத்துக் கொண்டான்.

டீக்கடையை நோக்கி நடந்தான். பங்குனி மாச வெக் கையும், இறுக்கமும் விடிந்த பொழுதிலேயே இருக்கிறது.

காலைக் கரண்டு. ஆறு மணிக்கு நின்று வருகிற கரண்டு 'த்ரீபேஸ்'. பம்ப்ஷெட் மோட்டார் ஓடும். கோடைப் பாய்ச்சல். எல்லோரும் மம்பட்டியோடு தண்ணீர் பாய்ச்சப் போய் விட்டதால், டீக் கடையில் ஈயாடுகிறது.

ஓட்டமாய் ஓடிவருகிற எதிர்வீட்டுக்காரனைக் கண்டு திகைக்கிற ராசாமணி. அவன் முகத்தில் பதற்றமும், வியர்வை மணிகளும்.

''ஒங்கவீட்டு வாசல்லே வந்து... சாமிநாதன் காட்டுக் கூச்சலாய் சத்தம் போட்டு... 'தங்கு, புங்கு'ன்னு குதிக்கான்...''

''என்னவாம்...?''

''தெரியலே...''

திகில் பிடித்துப் போய் ஓடினான் ராசாமணி. புரியாத குழப்பம். சண்டை போடுகிற மாதிரியான தாவா எதுவு மில்லையே...

பங்குனி மாசம். அருங்கோடை, தீ வெயில், கிணற்றுத் தண்ணீர், ஒட்டைப் புடுங்கிப் போகிற மாதிரி வேகமாக வற்றி வருகிறது. வற்றுப்பாடு கிணறு. காயும் பூவுமாய் மிளகாய்ச் செடிகள். நல்ல பூபலன். தண்ணீர் பற்றாக்குறை.

நேற்றுடன் சாமிநாதன் இறவைமுறை முடிந்து விட்டது. ரெண்டரை வாய்க்கால் தண்ணீர் பாயாமல், மிச்சமாய்க் கிடந்தது. தலை தொங்கி வாடிக்கிடக்கிற மிளகாய்ச் செடிகள்.

ராத்திரி வீடு வந்து மருகி நின்றான், சாமிநாதன்.

''விட்டுக் கொடேன்... ரெண்டரை வாய்க்காலை நான் பாய்ச்சுக்கிடுதேன்''

ராசாமணி மறுத்தான். அவன் புஞ்சையிலும் கடும் வாட்டம். மிளகாய்ப் பழம் பொறுக்கியாகி விட்டது. நாலுசாக்கு பழம். பழம் பொறுக்கி விட்டால், மறுநாளே தண்ணீர் பாய்ச்சியாகணும். வேறுவழியில்லை.

ராசாமணி மறு;க்க... மறுக்க... மருகி மன்றாடிய சாமிநாதன். ''விட்டுக் கொடுங்க பாவம்'' என்று கண்ணசைத்த இவன் மனைவி. 'தாட்சண்யம் பார்க்காமலிருக்க முடியாதே...''

''சரி'' என்றான், ராசாமணி.

சந்தோஷமாகிப் போன சாமிநாதன். ராத்திரி ரொம்ப நேரம் பேசிக் கொண்டு இருந்துவிட்டுத்தான் போனான்.

'பிறகெதுக்கு விடியக் காலம் சண்டைக்கு வரணும்?'

ராசாமணி நடையை எட்டிப் போட்டான். மனசின் பதைப்பு காலுக்குப் புரிகிறது.

இவன் போய்ச் சேரவும்... வீட்டு வாசலில் வசவும் பேச்சுமாகக் கொதித்துக் கொண்டிருந்த சாமிநாதன், பொங்கிச் சீறினான்.

''ச்சீய்... நீயெல்லாம் ஒரு மனுசந்தானா? சம்சாரிக்குப் பொறந்த சம்சாரிதானா?''

''ஏய்... வார்த்தையை அளந்து பேசு... கொட்டுனா... அள்ள முடியாது''

''என்ன மயித்துக்கு அளந்து பேசணும்? நீயெல்லாம் ஒரு மனுசனா? நீ திங்குறதெல்லாம் சோறுதானா? ராத்திரி தண்ணி பாய்ச்சுக்கோன்னு, யோக்கியங்கணக்கா பேசிட்டு... விடியக்காலம் வழியை மறிக்கீயே...''

''நா எங்க வழியை மறிச்சேன்? ஒங்கிட்டேதானே பம்ப்ஷெட் ரூம் சாவி இருக்கு?''

''யோக்கியன், கருணைப் பிரபு கணக்கா பேசியனுப் பிட்டு, ராவோட ராவா போய் ப்யூஸ் கட்டைகளை உருவி வைச்சுக் கிட்டா, எப்புடி? இதென்ன, கயவாளித்தனம்? ப்யூஸ் கட்டை இல்லாம கரண்டு என்னத்துலே வரும்? கரண்டு இல்லாம நா என்னத்துலே தண்ணி பாய்ச்ச?'' ஆங்காரமும் ஆத்திரமுமாய் கையை நீட்டிப் பேசுகிற சாமிநாதன்.

''ஒங்கிட்டே எனக்கென்ன பயமா? நீயென்ன, எந் தலையைச் சீவிருவீயா? கொண்டா, ரூம் சாவியைக்

குடு'ன்னு கேக்க முடியாதா? என்னத்துக்குப் போய்... ப்யூஸ் கட்டைகளை உருவணும்?''

சாமிநாதனுக்கு உள்ளுக்குள் ஏதோ அறுந்த மாதிரி யிருந்தது. விறைப்பும், வீராப்பும் தளர்ந்தது. ராசாமணி பேச்சிலுள்ள தர்க்க நியாயம், அவனை யோசிக்க வைத்தது.

''அப்ப... நீ ப்யூஸ் கட்டைகளை உருவலியா?''

''நா என்னத்துக்கு உருவணும்?''

ராசாமணி நடந்து வருகிற போது விறுவிறுப்பு கண்ட நாலைந்து பேர் 'என்னமோ, ஏதோ'வென்று பின்னாடியே வந்திருந்தனர். சாமிநாதன் பண்ணிய அலப்பரையும், சலம்பலும் ஏழெட்டுப் பேரை கூட்டியிருந்தது.

கூட்டத்தின் சலசலப்பு, நடந்த விவகாரம் புரிந்த வெளிச்சத்தில் அவர்களின் குறுக்கீடு.

''ஏய், சாமிநாதா... நீ... விடியக் காலம் போகையிலே ப்யூஸ் கட்டை இல்லியா?''

''இல்லே...?''

''எங்க?''

''மின்கம்பத்திலே உள்ள பெட்டியிலே தாம்...''

''யார் உருவுனது?''

''அதானே....தெரியலே''

''ராவோட... ராவா... ப்யூஸ் கட்டைக்கு எந்தக் களவாணி வரப் போறான்?''

''வந்துருக்கான்லே?''

''அப்ப... இது... நம்ம செந்தட்டி வேலையாத் தானிருக்கும்''

''செந்தட்டியா...'' எல்லோருக்கும் மறைந்திருந்த சூட்சுமம் புரிந்தது.

''அட, ஆமா'' என்று ஆமோதிப்புடன் வியப்பில் வாயைப் பிளந்தான் சாமிநாதன். எல்லோரும் தான்.

''ஆமோப்பா... செந்தட்டிதான் ரா முழுக்க ஒறக்க மில்லாம சுத்துவான். தென்னை மர உச்சியிலே ஏறுவான். இல்லேன்னா... ப்யூஸ் கேரியலை உருவுவான்...''

''அந்த மெண்டலுக்கு இந்தப் ப்யூஸ்கேரியல் என்ன செய்ய?''

''ம்...? வறுத்துத் திங்க...''

எல்லோரும் சிரித்தனர். சாமிநாதன் விளக்கெண்ணெய் குடித்தவனைப் போல திணறல் முழி முழித்தான். தர்ம சங்கடமாய் தத்தளித்தான்.

ராசாமணி வேதனையும், சமாதானமுமாய் புலம்பி னான். ''அந்தக் கிறுக்குப் பய களவாண்டுட்டுப் போக... சாமிநாதனும் நானுமில்லே சண்டை போடத் தெரிஞ்சோம்?''

''நல்ல வேளை... ராசாமணி கூறுபாடோட பேசப் போய்... முறுக்கு வெறைப்பு எல்லாம் கொறைஞ்சு, நெசத்தை கண்டுபிடிக்க முடிஞ்சது.''

''செந்தட்டி இப்புடியே கிறுக்குப் புடிச்சுப் போய்த் திரியுதானே... அவனை ஒண்ணுஞ்செய்ய முடியாதா?''

''துட்டு இருந்தா... முறையா வைத்தியம் பார்க்கலாம். கஞ்சிக்கு வழியில்லாத குடும்பத்துலே என்ன செய்ய?''

எல்லோரும் செந்தட்டியைப் பற்றி அனுதாபமும் பரிவுமாகப் பேசினர்.

**2**

**ராத்திரி ரெண்டுமணி இருக்கும். தெருவிளக்குகள் உறங்காமல் விழித்துக் கொண்டிருக்கின்றன. காற்றின் உறக்கத்தில் மௌனத்தில் புதைந்த சலனமற்ற மரங்கள்.** எல்லோருக்கும் உறக்க தேவதையின் மயக்க வருடல். நாய்கள், ஆடுகள் உறங்குகின்றன. கோழிகளும் கூட அரைக்கண் மூடி மூடி உறங்குகின்றன. சகல உயிரினங் களும் உயிர்வாழ உறங்குகின்றன.

உறங்காமலிருக்கிற பிரக்ஞையில்லாமலேயே நடக்கிற செந்தட்டி. ''ஓட்டைக்காது கிடாயையும்... வவுத்து வெள்ளை கிடாயையும் காணலே. எங்க போய்த் தொலைஞ்சது? சனியன் புடிச்ச கழுதைக. கள்ள நாய்க... எங்க போய்த் தேடுறது, இந்தச் சனியன்களை... ச்சேய்...''

தீவிரக் கவலையோடு முணுமுணுக்கிற செந்தட்டி, ஊரைக் கடந்து காட்டுக்குள் வந்தான். புஞ்சைப் பொழி யில் தடுமாற்றமில்லாமல் நடக்கிறான்.

இருட்டுக்குப் பழகிய கால்கள். கண் விழித்திருக்கிற அனிச்சை மனப்பார்வை. அதன் ஒளியில் தன்போக்கில் நடக்கிற கால்கள். பாதத்தில் குத்துகிற நெருஞ்சி முட்கள். மூளைக்குச் செல்லாத வலி. தரையில் அழுத்தி இழுவிக் கொள்கிற அனிச்சைச் செயல். மூளை லகானுக்குள் சிக்காத உடலசைவுகள். விறைப்பேறுகிற நரம்புகள். வேக மெடுக்கிற கால்கள். இரையைப் பார்த்த புலியைப் போல, பாய்ச்சல் எடுக்கிற செந்தட்டி.

''ஏய்க்... வவுத்து வெள்ளை, இங்கயா கெடக்கே? நா எங்கெல்லாம் தேடிக்கிட்டுத் திரியுதேன்...''

ஓடைக்குள் இறங்காமல் சீமை வேலி மரங்களுக்குள் மிருகம் போல ஊடுருவினான். முள்கவைகளில் காலை வைத்து, உன்னித் தாவினான். நடுப்புஞ்சைக்குள் குறுக்கு வெட்டாக நடந்தான். கிழிந்து கந்தலான அழுக்கு கைலியை சுருட்டி தலைப்பாகையைக் கட்டியிருந்தான். நூல் நூலாகப் பிரிந்து நைந்து போன காக்கிடவுசரில் ஏழுகோட்டை அழுக்கு. நாள்பட்ட மூத்திரக்கவிச்சி. மாசக்கணக்காக தண்ணீர், எண்ணெய் பார்க்காமல் சொங்கு பத்திய திரேகம். செம்பட்டை பாய்ந்து, சடைபின்னிக் கொண்ட காய்ந்த தலைமுடி, ஜடாமுடியாக...

வவுத்து வெள்ளையையும், ஓட்டைக்காதையும் அயத்து விட்டான். அமைதியே கண்ணயர்ந்து உறங்குகிற ராத்திரியில் இவன் செய்கிற அலப்பரை. போடுகிற காட்டுக் கூச்சல்.

அவ்வப்போது, சாமி வந்து அருள் இறங்கியவனைப் போல, குலவை போட்டுக் கொண்டு ஓடுகிற வெறி யோட்டம்.

ஆற்றுக்கு வடக்கில் பனந்தோப்பு. பனந்தோப்பின் உச்சியில் படுத்துக்கிடக்கிற மயில்கள். நரிகள் தான் வந்து விட்டனவோ என்ற பயத்தில்... ''பீ...க்கா...க், பீக்...கா...க்'' என்று கத்துகின்றன. மயிலின் கதறல்களில் திடுக்கிட்டு விழிக்கிற காட்டமைதி. அதையும் அவன் கேட்கவில்லை.

எதையும் பொருட்படுத்தாமல் செடிகொடிகளை மிதித்து துவம்சம் பண்ணிக் கொண்டு நடக்கிற செந்தட்டி. கண்ணுப்பீழை கதிர்களை உருவி வாயில்போட்டு மெல் கிறான். ஆவாரஞ்செடியின் பூங்கொத்தை பறித்து... கையில் வைத்து கசக்கி, சேவு மாதிரி தின்கிறான். கையில்

தட்டுப்பட்ட ஆதாளைச் செடியின் காய்களை பறித்துத் தின்கிறான். ஆதாளைக் காயிலிருந்து வெள்ளை நிறப் பால் வாயெல்லாம் பரவி... உறைந்து... பிசின் மாதிரி வாயை ஒட்டிக் கொள்கிறது.

அதையும் அவனொன்றும் அதிர்வாக உணரவில்லை. எதையுமே உணரவில்லை. பிசினையும் உணராத வெறி மனம்.

பம்ப்ஷெட் ரூமின் மேல் ஏறினான். பக்கத்திலிருக்கிற மின்சாரக் கம்பம். அதன் முழங்காலில் ஒரு தகரப் பெட்டி. ப்யூஸ் கேரியல். மின்கம்ப நெற்றியிலும் ஒரு சின்னப் பலகை. அதிலும் ப்யூஸ் கேரியலும் கட்டைகளும்.

எதை உருவுறது. முழங்கால் பெட்டியிலா, நெற்றிப் பலகையிலா?

இருட்டைத் துழாவுகிற கைகள். பம்ப் ஷெட் ரூமின் உச்சியில் நின்று கொண்டு, கிணற்றைப் பார்த்தான். கரிய மினுமினுப்பில் நட்சத்திரப் புள்ளிகள். வெள்ளி வெளிச்சத்தில் புகை நிற மேகங்கள். மேகத்தைப் பிடிக்க குனிந்து கை நீட்டினான். கிணற்றுச் சுவர்களில் அரச மரமும், மஞ்சணத்திப் புதரும்.

இவன் அந்த மேகத்தையே பார்த்தான். மீனை நோக்குகிற கொக்கின் மன உக்கிரம். தண்ணீருக்குள் குதித்து விட்டான்.

'தொபுக்கடீர்' என்கிற பேரோசை. சத்த அதிர்வுகள். நாலாபக்கமும் உயர்ந்து தெறிக்கிற நீர்ச்சளார்.

தண்ணீருக்குள் போனால்... பொங்கிப் பெருகுகிற பச்சை நிற நுரைகள். சிறிசும் பெரிசுமாக கோடிக் கணக்கிலான நீர் முட்டைகள். கரும்பச்சை நிற நீர்ச்சுவர். தண்ணீரின் மேல்தளம் வந்தான். வாயில் அள்ளியிருந்த நீரை கொப்பளித்தான். தண்ணீருக்குள் ரெண்டு மூன்று

சுற்று நீச்சலடித்தான். படியை தவிர்த்து விட்டு... அரச மர வேர்களைப் பற்றினான். சுவரில் படிந்து நீள்கிற வேர்கள். பற்றி, தாவி... தத்திப் புத்தி... வழுக்கும் பாதங்களை பாறைச் சொரசொரப்பில் வைத்து... உன்னி... ஏறி... நடுச் சுவருக்கு வந்து... பம்ப் ஷெட் குழாயில் ஏறி... ஊர்ந்து முன்னேறி... ஓட்டை வழியே கரட்டான் போல, உடம்பை ஒடுக்கி... உள் நுழைந்து... மேல் பெட்டுக்கு வந்து... சுவரில் பொருத்தியிருந்த சுவிட்சு போர்டு, ப்யூஸ் கட்டை களை மட்டும் உருவி, காக்கி டவுசரின் பையில் போட்டுக் கொண்டான். மறுபடியும் ஓட்டை வழியே வெளிவந்து குழாய் வழியாகச் சரிந்து... தண்ணீருக்குள் விழுந்தான்.

மஞ்சணத்தி மரத்துப் புதருக்குள் ஒரு சரசர சத்தம். காய்ந்த சருகுகளின் நெறுநெறுப்பு. பச்சை இலைகளை வளைத்து அழுத்துகிற சலசலப்பு. எதுவோ புரண்டு நகர்ந்து செல்கிறது.

செந்தட்டி பண்ணுகிற மூர்க்க அலப்பரையில் பதறிப் போய் கலைந்தோடுகிற சாரைப் பாம்பின் நெளிவு. கைத்தண்டி இருக்கும். ஆள் உயரம் இருக்கும். சாரைப் பாம்பு வளைந்து நெளிந்து புதர் வழியாக ஊடுருவி... கிணற்றுச் சுவர் விளிம்பில் நகர்கிறது.

எதையும் உணராத செந்தட்டி, அரசமரவேர்களைப் பற்றி... ஏறி ஊர்ந்து முன்னேறி... மஞ்சணத்தி மரத்துத் தூரைப்பற்றி தவ்வி... தாவி...

அவிழ்ந்திருந்த நனைந்த கைலி... கழுத்தில் பாம்பு மாதிரி படிந்து கிடந்தது. நனைந்திருந்த காக்கிடவுசரி லிருந்து நீர் சொட்டடிக்கிறது. தாறுமாறாக வளர்ந்து கிடந்த ஜடாமுடி, நனைந்து, முகத்தின் நாலாபக்கமும் அப்பிக் கிடக்கிறது. அதையும் அவன் உணரவில்லை.

முழங்காலெல்லாம் சுவர்களில் உராய்ந்து... ரத்தச் சிராய்ப்பு, நெஞ்செலும்பில் சுவர்ப் பாறையின் பிறாண்டல்.

அதையெல்லாம் உணராத நிலையில் செந்தட்டி. கிணற்றுச் சுவர்களின் இரண்டு இடுக்குகளில் விரல் நுனிகளால் பற்றி கால் விரல்களால் கவ்வி... மேலேறி விட்டான். மின்கம்ப முழங்காலின் பெட்டியைத் திறந் தான். ரொம்பப் பரிச்சயமான இடத்தில் புழங்குகிற சகஜ பாவனையோடு இருட்டுக்குள் துழாவுகிற கை. ப்யூஸ் கட்டைகளை உருவினான்.

கிணற்றுத் தண்ணீருக்குள் எறிந்தான்.

''போங்க... சனியங்களா... உசுரைப் பறிக்கிற எமன் களா... போய்த் தொலைங்க...''

உடம்பெல்லாம் தூசியும், மண்ணும் அப்பிக் கிடக் கிறது. முள் இழுப்புகளும், பாறை வழிப்புகளும் ரத்தக் கோடுகளாக உடம்பெல்லாம். அதையெல்லாம் உணராத மனநிலையில் செந்தட்டி. கீழ்வான மேகங்களில் ரத்தக் கோலம். பிறைநிலா மெல்ல தலை நீட்டுகிறது. மங்கலான தங்க நிற வெளிச்சத்தில் படர்ந்திருக்கிற தேய்பிறைக்கறை.

கருமை படிந்த நிலாவெளிச்சத்தில் நட்சத்திரங்கள் உறங்கப் போய்விட்டன. இவனுக்கு மட்டும் உறக்கம் வரவில்லை. ஏன் வரவில்லை?

இவை எதையும் உணர முடியாத செந்தட்டி... தென்னை மரத்தில் மளமளவென ஏறினான். காலும் கையும் தவளை மாதிரி... தென்னை மரத்தோடு அப்பிக் கொள்ள, தவ்வித் தவ்வி மேலேறினான்.

முக்கால் மரத்து உயரத்துக்கு ஏறிய செந்தட்டி ''என்னத்துக்கு ஏறுகிறோம்'' என்று இலேசாக திகைத்தான்.

முக்கால் மர உயரத்திலிருந்து ஊரைப் பார்த்தான். தெருவிளக்குக்களைப் பார்த்தான். மங்கலான நிலா வெளிச்சம் படர்ந்த மிளகாய்த் தோட்டங்கள், பருத்திச் செடிகள் பார்த்தான். பூக்கள் பார்த்தான். வெடித்துச் சிரிக்கிற பருத்திகளின் சிரிப்பைப் பார்த்தான்.

கழுத்தை திரும்பிப் பார்த்தான். ஆற்றங்கரையோரத்து பனந்தோப்பு இருட்டுக் கற்றையாகத் தெரிகிறது. அதன் பக்கத்தில் -

சுடுகாடு. அங்கே தீப்பற்றியெரிவது போல அவன் மனதுக்குத் தெரிகிறது.

''ஐய்யோ... ஐயய்யோ... என்னோட வீரபாண்டியைத் தான். கொளுத்துறாங்களா? அவனைத் திங்குற தீ தானா... அது?''

அவன் மனசு அலறுகிறது. கிறுக்குப் பிடித்த வெறியில் கதறுகிறது.



## 3

அப்போது -

வீரபாண்டிக்கு பதிமூன்று வயது. ஆறாம் வகுப்பில் உட்கார்ந்திருந்தான். முதல் வரிசைப் பெஞ்சில் ஏழாவது பையனாக இருந்தான்.

தமிழையா பாடம் நடத்திக் கொண்டிருந்தார். தமிழ் இலக்கணப் பாடம்.

''ராமன் காட்டில் இருந்தான்.

ராமன் ராஜ்யம் நடத்துகிறான்.

ராமன் சரயூ நதிக்குப் போவான்.

இதுலே காலம் சொல்ல முடியுமா? எவனுக்காச்சும் தெரியுமாலே?''

ஒவ்வொரு பையனாக விரல் நீட்டினார். நீட்டப்பட்ட பையன்களெல்லாம் பயத்துடன் எழுந்து, தண்ணீரில் விழுந்த எலிகளைப் போல 'விலுக், விலுக்'கென விழித்தனர்.

வீரபாண்டியை நோக்கி விரல். பயமேயில்லாமல் எழுந்தான். பவ்யத்தைக் காட்ட கைகளை நெஞ்சுக்குக் குறுக்காக கட்டிக் கொண்டான்.

பயமில்லாத விழிகள். தெறிப்பான துள்ளல் முகம். உதடுகளில் ஒரு சிறிய மென்னகை.

''கார்ட்டுலே இருந்தது பகல் காலம்... ராஜ்யம் நடத்துனது ராத்திரி காலம். சரயூ நதிக்குப் போனது விடியக் காலம், சார்''

''என்னத்துக்குடா... நதிக்கு விடியக்காலம்?''

''குளிச்சு முழுகணும்லே?''

''குளிச்சு முழுகிட்டு?''

''மூக்குப் புடிக்க... பழைய கஞ்சியை புடிச்சு மாட்டிர வேண்டியது தான்''

''அப்புறம்.''

''பசிக்கணும்லே? களத்துக்கு வெளையாடப் போயிரணும். ஒரே ஓட்டம்... கிண்ணிரவேண்டியதுதான்''

வகுப்பு முழுக்க சிரிப்பலைகள். தமிழையாவின் பஞ்சிரிப்பு.

தமிழையாவின் முகத்திலிருந்த கேலிச் சிரிப்பு. கோப மில்லாத ஏளன இளநகை. பதில், தப்பாகிவிட்டதை ''என்னத்துக்குடா'' என்ற கேள்வியிலேயே புரிந்து கொண் டான், வீரபாண்டி. அப்பவும் பயப்படவில்லை.

தமிழையாவின் கோபமற்ற எள்ளல் நகை. அவனைத் தொடர்ந்து பேச்சு விளையாட்டில் ஈடுபட வைத்தது.

''ஏலேய் வீரபாண்டி, திங்கவும் வெளையாடவும் தானே தெரியும்? குளிக்குறதுக்கெல்லாம் தெரியுமா... டா, ஒனக்கு?''

பெரிய சிரிப்பாக வெடிக்கிற தமிழையா,

குறுஞ்சிரிப்பாக பூக்கிற வீரபாண்டி.

''எல்லாம்... ஒரு அனுமானம் தான் சார்...''

''அதானே... பாத்தேன்...''

வகுப்பு கலகலப்பாக இருந்தது. விட்டு விடுதலை யான மனச் சுதந்திரத்துடன் வாய்விட்டுச் சிரிக்கிற பூச் செண்டுகள். சிரிப்பின் வாசம் வகுப்பு முழுக்க பிரகாசமாக ஜொலிக்கிறது.

நாலாவது பெஞ்சின் கடைசிப் பையன் செந்தட்டி. வீர பாண்டியை பிரமிப்பாகப் பார்க்கிறான்.

பயமற்ற அவனது துணிச்சல். வாத்தியாரிடமே சரிக்குச் சரியாக கேலி கிண்டல் பண்ணுகிற எகத்தாளம். அவனது தைரியம்.

அடிப்பாரோ என்கிற அச்சமற்ற மனநிலை.

இவனுக்கு நினைத்தாலே நடுங்குகிறது.

கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்கிற சரி யான பதிலுக்கு, மாறான பதிலைச் சொல்லியிருந்தால்...?

இவன் வாயிலிருந்து பதில் வந்திருந்தால்...?

அடி பின்னியெடுத்து விடுவார். தலைமுடியை கொத்தாகப் பற்றி, இழுத்தமுக்கி, முதுகில் நாலு போடு. காதில் மேல் நுனியை கிள்ளிய நிலையில் முன்னுக்கும் பின்னுக்குமாக இழுப்பார். மனசுக்குள் நிழலாடுகிற அடிபட்ட வலிகள்.

ஒண்ணுக்கு விட்ட நேரம். எல்லாப் பையன்களோடும் ஓடுகிற வீரபாண்டி. அவனோடட சேர்ந்தோடுகிற செந்தட்டி.

''ஏய்... வீரா''

''என்னடா...?''

''தமிழையாகிட்டே ஒனக்குப் பயமேயில்லியே?''

''எதுக்குப் பயப்படணும்? அவருதான் என்னை அடிக்க மாட்டாரே...''

''பெறவு... என்னை மட்டும் அடிச்சாரே... அன்னிக்கு ஒரு ஸ்பெல்லிங் மிஸ்டேக்குக்காக என்னைப் போட்டு வெளுத்துட்டாரே...''

''நீ... சேரிப்பய தானே? எம்மேலே கை வைச்சார்ன்னா, வாத்தியாரு கதை கந்தலாயிருமே...''

''அடிப்பீகளா... தமிழையாவை?''

''அடிக்கணுமா? எங்காளுக ஏழெட்டுப் பேரு சுத்தி நின்னுக்கிட்டு, ''என்னய்யா''ன்னு அரட்டுனாலேயே... வாத்திமார்க 'தர்ருக், தர்ருக்'குன்னு கழிஞ்சிரமாட்டாக...?''

மதர்ப்பும், திமிருமாக வீரபாண்டி பேசுகிற எகத்தாளம். உறவுக்காரர்கள், சொந்தச் சாதிக்காரர்கள், வலுவானவர்கள் என்ற பாதுகாப்புணர்வு. பாதுகாப்புணர்வில் வருகிற பயமின்மை. பயமற்ற துணிவு.

வீரபாண்டி கடைக்குப் போகிறான்.

''அம்பதுகிராம் சேவு குடுங்க...''

''காரச்சேவா..., கருப்பட்டிச்சேவா?''

''காரச்சேவு''

விலகிப் போக யத்தனிக்கிற செந்தட்டியை கூப்பிடுகிற வீரபாண்டி.

''ஏலேய்... வாடா... இங்க...''

''என்ன...?

''சேவு தின்னுரா...''

காசு கொடுத்து வாங்கிய காராச்சேவு. ஆளுக்குப் பாதியாக பகிர்ந்து கொள்கின்றனர். உள்ளங்கைகளுக்குள் வைத்து ஒரு நொறுக்கு நொறுக்கி... அண்ணாக்க வாயில் போட்டு மொறு மொறுப்புடன் தின்கிற வேகம். மணி யடிப்பதற்குள் தின்று தீர்க்க வேண்டுமென்கின்ற அவசரம். மெல்லுகிற துரிதம்.

''தின்னுரா... சீக்கிரம்''

'பெல்லடிச்சுருவாங்கடா...''

''ஏலேய்... செந்தட்டி, போய் தண்ணி வாங்கிட்டு வாடா... விக்குது...''

''பெல்லடிச்சுட்டா...?''

''நா பாத்துக்கிடுதேண்டா...''

''வாத்தியாரு அடிச்சா?''

''நா இருக்கேன்லே?''

''அப்பச்சரி...''

செந்தட்டிக்குள்ளும் வருகிற துணிவு. பயமின்மை. ஆள் செல்வாக்குள்ள வீரபாண்டியன் பாதுகாப்புக் குள்ளிருக்கிற பத்திர உணர்ச்சி...

இருகன்னங்களும் புடைக்க வாயில் போட்டு மெல்லுகிற சேவுடன், ஓட்டமாய் ஓடுகிற செந்தட்டி. ஓடுகிற வேகத்தில் வெள்ளைச் சட்டையின் சடசடப்பு. முதுகுப் புறச் சட்டை காற்றில் உப்புகிற உணர்வு. அது தருகிற குதூகல உணர்ச்சி.

சட்டையின் புடைப்பை ரசிப்பதற்காகவே ஆகாயத்தில் மிதக்கிற உணர்ச்சியை அனுபவிப்பதற் காகவே - ஓட்டத்தை துரிதப்படுத்துகிற செந்தட்டி.

டீக்கடையில் நிற்கிற ஒரு உறவுக்காரர். ''ஏலேய் செந்தட்டி, பள்ளிக்கோடம் போகலியா? எங்கேலே போற?''

''வீரபாண்டிக்கு தண்ணி வாங்க...''

''அப்பச் சரி... நீ ராசாவீட்டுக் கன்னுக்குட்டி தான்.'' செந்தட்டிக்குள் சிறகு முளைத்த உற்சாகம். உயரத்தில் பறக்கிற மகிழ்ச்சிப் பரவசம்.



## 4

அன்றைக்கு வெள்ளிக்கிழமை. பள்ளிக்குச் செல்கிற அவசரத்தில் செந்தட்டி, கொடியில் காய்ந்து, வெடவெடப் பான சுருக்கங்களோடு இருந்த காக்கிடவுசர். அதே கொடியில் கிடந்த வெள்ளைச் சட்டை. ஈரத்தில் விழுந்த மடிப்புகள் உலர்ந்து போயிருந்தன. சட்டையில் குறுக்காக கொடிக் கயிற்றின் முறுக்குத் தடம் பதிந்திருந்தது. சட்டைகளின்

விடைப்புகளும், விறைப்புகளும். உதறிப்போட்டுக் கொண்டான். சீசாவிலிருந்த தேங்காயெண்ணெய் கவிழ்த்து... ஏழெட்டு சொட்டுகளில் தேய்த்து முடித்துக் கொண்டான்.

செத்த மாட்டை சுமந்து கொண்டு வந்தனர், ஏழெட்டுப் பேர். குறுக்காக பின்னிக் கட்டிய கால்களுடன் மூங்கில் கழியில் மல்லாக்க தொங்குகிற செவலை மாடு. அதன் கரிய கண்ணில் உயிரற்ற ஈரக்கசிவு. மொய்க்கும் சிறு ஈக்கள்.

கனத்த சுமையை முக்கித்தக்கி சுமந்து வருகிறவர்களின் முகத்தில் வியர்வைக் கசிவுகள். மகிழ்ச்சி மின்னல்கள். கண்ணில் களிதுள்ளல். மட்டன் கிடைக்கப் போகிற சந்தோஷம். ரொம்ப நாள் கழித்து... செழிக்க செழிக்க வீடுகளில் கவிச்சி வாசம் வரப் போகிற பரவசம். மனசின் ஏக்கம் நாவில் எச்சிலாக வழிகிறது.

தெருவின் நெரிசலுக்குள் வாலையாட்டிக் கொண்டு செல்ல உறுமல் உறுமிக் கொண்டு திரிகிற பன்றிக் குட்டிகள். சாக்கடைச் சந்தனம் காய்ந்து அடைஅடையாக பிய்ந்து வர... தள்ளாடி நடக்கிற சினைப்பன்றி.

''ஏலேய் செந்தட்டி... கஞ்சி ஊத்தியாச்சு''

''கடிச்சிக்கிடை?''

''பத்துவிரல்லே ஒத்தை விரலைக் கடிச்சுக்கோ''

''ஒண்ணுமில்லியா?''

சள்ளையும் எரிச்சலுமாகக் கேட்கிற செந்தட்டி. அவன் குரலின் சிணுங்களில் அழுகையின் பிசுபிசுப்பு.

''ராத்திரி கொழம்பை சுடவைச்சிருக்கேன். தொவையல் மாதிரி இருக்கும். எடுத்து வைச்சுக்க...''

''நீ எங்க போற?''

''உங்க அப்பன் கட்டி வைச்சிருக்கிற ஊஞ்சல்லே ஆட''

சலிப்பையும் கசப்பையும் கூட கடுப்பாகச் சொல்கிறாள்.

''யார் புஞ்சைக்குப் போற? சொல்லித் தொலையேன்?''

''ராம சுப்புராசு நாயக்கரு புஞ்சைக்கு...''

அவசர அவசரமாக சாப்பிட்டு முடித்தான். பிசைந்த நொறுங்கல் கரைந்த கடைசிக் கஞ்சியை தூக்கிக் குடித்தால், அது தனீ ருசி. அதன் வாசமே தனீ. வயிற்றின் இண்டு இடுக்குகளில் ஊடுருவிப் பரவி... மனநிறைவைத் தருகிற அதன் வாசம்.

செந்தட்டி ஆலாய் பறந்தான். துரிதகதி. செயல் பரபரப்பு.

வீரபாண்டி ஊருக்குள் இருப்பான். இவனுக்காகக் காத்திருப்பான். இவன் வந்த பிறகுதான்... இருவரும் கடைக்குப் போவார்கள். கருப்பட்டி மிட்டாய், சீனிக் கிழங்கு, அவித்துத் தாழித்த மொச்சைப் பயறு, மைசூர்பாகு ஏதாச்சும் வாங்கித் தருவான், வீரபாண்டி.

செவலைக் கிழங்கு என்றால்... சீனிக்கிழங்குதான் கேட்பான் செந்தட்டி. அவித்த வேக்காட்டில் வெடிப்பு கண்டு நிற்கும். தோலே தனீ ருசி. பிய்த்துப் பார்த்தால்... உள்பக்கம் சந்தன மின்னலாக இருக்கும். வெந்த தங்கக் குழைவாக இருக்கும். கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருக்கும். சீனிக்கிழங்கு என்று தான் பெயர். இனிக்காது. ஆனால்... ரொம்ப ரொம்ப ருசியாயிருக்கும். திங்கத் திங்க ஆசை பொங்கும். 'கொண்டா, கொண்டா' என்கும்.

கருப்பட்டி மிட்டாயும் நன்றாக இருக்கும். பின்னல் வளைவுகளாக இருக்கும். பிய்த்தால்... உடைகிற சத்தம். உள்ளே இனிப்புப் பாகு மின்னும். கருப்பட்டியும் அரிசி மாவும் கலந்த அதில் ஒரு வறுத்துப் போட்ட எள் வாசமும் வரும்.

நிறைய வாங்கித் தருவான், வீரபாண்டி. பையில் எடுக்க எடுக்க காசுவரும். இத்தனைக்கும் அவனது அய்யா ஆடு மேய்க்கிறவர்தான். அம்மா கூலிவேலைக்காரி. ஏழை தான்.

பிறகு... எப்படி இம்புட்டுக்காசு?

''ஏதுடா... இம்புட்டு ரூவா... ஒங்கிட்டே...?''

கேட்டால், வீரபாண்டி கண்ணைச் சிமிட்டுவான். எக்களிப்பான குறுஞ்சிரிப்பு வேறு. காதுக்குள் கிசு கிசுப்பான்.

''நேத்து ஒருத்தன் புஞ்சையிலே பருத்தி ராத்திரி களவாண்டேன். அந்தச் சில்லறைதான்''

செந்தட்டி பிரமிப்பான். அவனது துணிச்சலிலும், சாகசத்திலும் கிறுகிறுத்துப் போவான். ''அடேங்கப்பா... வீரபாண்டின்னா... இவன் தான். பேருப் பொருத்தம் 'கச்சுன்'னு அமைஞ்சிருக்கு...'' என்று மனசுக்குள் வியப்பின் மலைப்போடு முணுமுணுப்பான்.

''என்னலே... இந்த முழி முழிக்கே?''

''ஒண்ணுமில்லே... நீ வீரமான பாண்டிதான்''

''நீ வீட்டுப்பாடம் எழுதுட்டீயா?''

''ம்... தெருவிளக்குலே''

''நா எழுதலே... அதைப் பத்தியும் கவலையுமில்லே...''

''ஒனக்கென்னப்பா... ஊர்லே செல்வாக்குள்ள சாதிக் காரன். நீ வைச்சதுதான் சட்டம். அடிச்சதுதான் மொட்டை''

பெருமை பொங்க சிரித்துக் கொண்டான் வீரபாண்டி. மைசூர் பாகைக் கடித்தான். கடித்த நொறுக்கல் கீழே விழாமல், அண்ணாக்க நிமிர்கிற அவன்.

மதியபெல் அடிக்கப் போகிற நேரம். ஓட்டமாய் ஓடிவந்த சேரிக்காரன். இளைப்பும், தகையுமாக ஓடி வருகிறான். மூச்சிரைக்கிறது. பாய்ச்சல் வேகத்தில் பள்ளிக்குள் புகுந்த அவன்,

''செந்தட்டி எங்க இருக்கான்?''

''என்னப்பா?''

''செந்தட்டியோட அய்யாவை கரண்டு அடிச்சுருச்சு. கரிக்கட்டையா தூக்கிட்டு வந்துட்டாக...''

செந்தட்டி ஆடிப்போனான். ''அய்யா... அய்யா... அய்யா'' என்று கண்ணைக் கசக்கிக் கொண்டு அழுதான்.

சயன்ஸ் வாத்தியார்தான் அதிர்ச்சியில் வெல வெலத்துப் போன நிலையில் வகுப்பிலிருந்தார்.

''டேய்... செந்தட்டி... பைக்கட்டை தூக்கிட்டு நீ போடா... வீரபாண்டி, நீயும் கூடப்போடா...''

என்று சொன்ன வேகத்தில்... ஓடிவந்த களைப்பில் 'தஸ்ஸ், புஸ்ஸ்' என்று இளைக்கிற சேரிக்காரனிடம் கேட்டார்.

''எப்படியாயிடுச்சு?''

''தண்ணி பாய்ச்சுக்கிட்டிருந்துருக்கான். பம்ப் ஷெட் மோட்டாரு ஓடிக் கிட்டிருந்துருக்கு. 'திடுதிடு'ப்புன்னு கரண்டு கட். துப்புறவா கரண்டு இல்லே. வாய்க்கா வரத்துத் தண்ணியை பாய்ச்சுக்கிட்டுருக்குரப்பவே... ஊருக்குள்ளே டேப்-ரிக்கார்டு படிக்குற சத்தம் கேட்டுருக்கு''

''கரண்டு வந்துருச்சோ...?

''ஆமா... மறுபடியும் மோட்டாரை ஸ்டார்ட் பண்றதுக்கு பம்ப்ஷெட் ரூமுக்கு வந்துருக்கான். பெட்டுக்குள்ளே

எறங்கி, 'ஏர்வாஸ்' புடுங்கி விட்டுட்டு மேலே வந்து... பச்சைப் பட்டனை அழுத்துனா... கரண்டு இல்லே... ஊருக்குள்ளே டேப்ரிக்கார்டு பாட்டுச் சத்தம்.

மெயின்லே ப்யூஸ் கட்டையை உருவிப் பார்த்தா... ப்யூஸ் போகலை. மேலே வந்து மின்கம்பத்திலே உள்ள இரும்புப் பெட்டியிலே பெரிய பெரிய ப்யூஸ் கேரியர்கள். உருவிப் பாக்குறப்ப... அங்க கரண்டு இருந்துருக்கு. மூணாவது கட்டையை உருவிப் பாத்துட்டு சொருகுறப்ப... எப்படியோ கை பட்டுருச்சு, ஈரக்கை, ஈரக்கால், ஷாக்கடிச்சுருச்சு. வுடவேயில்லை. துடிச்சிருக்கான். கதறியிருக்கான். ரத்தத்தையும் உசுரையும் உறிஞ்சி முடிச்சுட்டுத் தான் கட்டையை வுட்டுருக்கு...''

அவன் சொல்லச் சொல்ல மொத்த வகுப்பே சோக மௌனத்தில் புதைந்து நிற்க... சயன்ஸ்வாத்தியார் தான் வருத்தம் தாளாமல், மன ஈரத்துடன் ''உச்சுச்சூ'' என்று சூள் கொட்டினார்.

''ஒரு நாள் கூலிக்கு தண்ணி பாய்ச்சப் போனவன், பாவம் உசுரையே பாய்ச்சுட்டு வந்துட்டான்''

சேரிக்காரன் போக... கண்ணீரும் அழுகையும் விசும்பலுமாக புறப்படுகிற செந்தட்டியின் தோளில், அவனது புத்தகப் பைக்கட்டு. பைக்கட்டில் 'கோட்டியப்ப நாடார் கம்பர்ஸர் மோட்டார் வியாபாரம், சாத்தூர்' என்ற விளம்பர வரிகள், இந்தப் பைக்கட்டு திரும்பி வருமா?

ஸயன்ஸ் வாத்தியார் மனம் கனத்தது. மின்சாரம் தின்று துப்பியது ஓர் உயிரை மட்டுமா? ஒரு குடும்பத்தையே, ஒரு சிறுவனின் கல்வியை, செந்தட்டியின் எதிர்காலத்தையே தின்னு துப்பிவிட்டது. உலகுக்கே வெளிச்சமும், இயக்கமும் தருகிற மின்சாரப் பூ... தீயாகி... எரித்து, ஒரு குடும்பத்தின் எதிர்காலத்தையே இருட்டாக்கி முடக்கி விடுமோ...

**ஸயன்ஸ் வாத்தியாரின் பயம்... மன நடுக்கம்... பொய்யாகிப் போய்விடவில்லை. செந்தட்டி, ஆட்டுக் கம்பைத் தூக்கி விட்டான். வயிற்றுக்குச் சோறு வேண்டுமே?**



## 5

ஆட்டுக்கம்பு அவனைவிட உயரமாக இருக்கிறது. செந்தட்டி கம்பை குறுக்காக பற்றித்தான் நடப்பான். மூன்று வெள்ளாடுகள். மரையாடு ஒன்று. தவிட்டு நிறம். மினுமினுப்பான தனிக் கறுப்பு ஒன்று. சீனி வெள்ளையில் ஒன்றிரண்டு, கறுவட்டம் உள்ளது ஒன்று. ஏழு மறிகள். பெரியதும் சிறியதுமான குட்டிகள். பாலும் குடிக்கும். கொழையும் மேயும். ஒரு கொம்பு முளைத்த கிடாய். காயடிக்காத கிடாய். விதை முதல்.

முள் கதவை இழுத்துவிட்டவுடன் தொழுவத்தை விட்டு புறப்படுகிற ஆடுகள். மூத்திரத்திலும் சாணியிலும் ஊறி நனைந்த ரோமங்கள் உலர்ந்து, சடைசடையாக இருக்கும். அது அரிப்பெடுக்கும்.

தொழுவம் விட்டு வெளியேறிய வெள்ளாடுகளும், குட்டிகளும் எதிரிலிருந்த மண்சுவர்களில் உடம்பைத் தேய்த்தன. சுவரில் சாய்த்த உடம்புடன் அழுத்தமாக உராய்ந்து கொண்டன. உராய உராய சுகப் பரவசம் அதுகளுக்கு.

தொழுவத்திற்குள் புழுக்கைகள், சாணித் திட்டுகள். மூத்திரக் கவிச்சி. உதிர்ந்து பரவிக் கிடக்கிற ரோம இணுக்குகள். பரணில் காய்ந்து வாடிய பழைய கொழைகள்.

ஆடுகளும் குட்டிகளும் மண் சுவர்களில் தேய்க்கத் தேய்க்க சுவர்ப் புழுதி மாவாக உதிர்கிறது. வீட்டுக் காரர்கள்... கோபம் கோபமாக கல்லையெடுத்து எறிகின்றனர்.

''ஆய்ய்க்... ஆய்யக்... ஆய்யக்'' என்று ஆட்டுக் குட்டிகளை அதட்டுகின்றனர்.

''இருக்குற மண் சுவரையும் தேய்ச்சி, தேய்ச்சி இடிச்சுட்டுப் போயிராதீங்க...ச்சூய்! ஆய்ய்க்...'' என்று ஆடுகளுடன் பேசிய வேகத்திலேயே ''செந்தட்டி... ஏலேய் சின்னக் கழுதை, குட்டிகளைப் பத்துரா...'' என்று கண்டிக் கிறார்கள்.

''யம்மா... நா ஆட்டுக்குப் போய்ட்டு வாரேம்மா''

''ம்... போய்ட்டுவா... ராசா... பாத்து கவனிச்சு மேய்ப்பா...

வெள்ளாமை வெளைச்சல்லே வுட்டுடாதேப்பா. தெண்டம் குடுக்க ஜீவனில்லே...''

''ஆகட்டும்மா...''

''நேரத்துக்கு சாப்புட்டக்கோய்யா...''

''ம்...''

''அந்த மரையாடு, செனையாடு. கெடாய் முட்டிராம கவனிச்சுக்க. நீயும் 'கல்லுட்டு, கில்லுட்டு' எறிஞ்சுராதே... பணம் பெத்த ஆடுப்பா...''

குரல் வழியாகவே அலைபரவுகிற பாசஅக்கறை. அன்பான அறிவுரை. குரலின் கனிவிலும் உடைவிலும் மனசின் அவல உணர்ச்சி.

''படிச்சு வெளையாடித்திரிய வேண்டிய தட்டாம்பூச்சி. வேனாக் கொதிக்குற வெயில்லே ஆட்டுக்கம்போட அல்லாடிச் சீரழிய வேண்டியதாயிருச்சே... அந்த ஒழக் கரிசிச் சீவன் இல்லாம... இக்கோலம் வந்துச்சே...''

அம்மாவின் அங்கலாய்ப்புச் சத்தம். மூக்குச் சீறும் சத்தத்திலேயே அழுகையின் கண்ணீரை உணர்கிற இவனது சிறுமனம். அம்மாவின் கண்ணீரையும், அவளது அழுகைச் சோகத்தையும் துடைக்க நீள்கிற விரலாக... இவனது மன அலைபாய்வு.

''ஏலேய்... செந்தட்டி, ஆடுகளைப் பத்துரா...'' என்று கூவல்காடு. இவனது பாச நெகிழ்வை மறிக்கிறது. அம்மாவிடமிருந்து பிரித்து... காட்டுக்கு துரத்துகிறது.

காக்கி டவுசர். அழுக்கான வெள்ளைச்சட்டையில் அகத்திக் கொழையின் கறைகள். இடுப்பில் இறுக்கிக் கட்டியிருந்த ரெட்டைப் பின்னல் நூல் கயிறு. அதற்குள் கோர்க்கப்பட்டிருக்கிற தூக்குச் சட்டி. நீர்ப்பாட்டில், தலையில் கட்டம் போட்ட துண்டைச் சுற்றியிருக்கிறான். காலில் டயரில் தைத்த முரட்டுச் செருப்பு. வலது கையில் பிடித்திருந்த கம்பு படுத்துச் சென்றது. அவன் ஓட ஓட... கம்பும் முன்னும் பின்னுமாக போய் வந்தது.

காலை வெயில், சுள்ளென்று அடிக்கிறது. தங்கநிற வெயிலின் தகிப்பு தெரியவில்லை. பழகிப்போன வெயில்.

காயடிக்காத கிடாய், மேற்பல்லை இளித்துக் கொண்டே ஒரு வெள்ளாட்டை 'கொடுமை' பண்ணிக் கொண்டிருந்து. எல்லா ஆடுகளையும் மொத்தமாக பற்றிய செந்தட்டி, அநதக் கிடாய்க்கு கம்பால் ஒரு வைப்பு வைத்தான். 'டப்'பென்று அடித்த அடியில், அது கதறிக் கொண்டு ஓடுகிறது.

ஆடுகளும் குட்டிகளும் தெருவில் கிழக்காகப் புறப் பட்டன. ஒரு குட்டி கூளப் படப்பில் வாயை வைத்தது. இன்னொரு ஆடு, அவரைக் கொடியை ஒரு லாவு லாவுகிறது.

எல்லாவற்றையும் 'விர்ர்ர்'ரென்று பறக்கிற கல் குறி பார்த்து, 'நச்'சென்று விழும். கல் விழுந்தவுடன், துள்ளிச் சிதறி விலகி ஓடும். கல்லெறிகள் தாம், கரையாக நின்று, ஆடுகுட்டிகளை நதிப்படுத்தும். நடத்தும்.

தெருவைக் கடக்கிற ஆடுகள். தெற்குப் பக்கப் பாதையில் திரும்பி, பள்ளிக்கூட முக்கில் திரும்புகிறது. பள்ளிக்கூடம் தாண்டுகிற போது... அவனுள் உயிர் நரம்பு அதிர்கிற ரணம். அறுபடுவதைப் போல வலி.

இவனிடமிருந்து தட்டிப்பறித்த இன்பம், விளை யாட்டு, பேச்சு, படிப்பு, ஓட்டம், ஆட்டம், நட்பின் ருசி, வீரபாண்டியின் கோட்டை அரவணைப்பு எல்லாம் போயிற்று.

தலைகுனிந்து கொள்கிற செந்தட்டி. பள்ளியின் முன்னால்... ரெண்டு பெரிய வேப்ப மரங்கள். அதன் நிழலில் நடக்கிற வகுப்புகள். சுற்று வட்டமாக உட்கார்ந் திருக்கிற பிள்ளைகள். வீரபாண்டியைத் தேடுகிற மனம். அவனது அண்மைக்காக ஏங்குகிற உணர்வுகள். நண்பனைக் காணாமலிருப்பதுவும் ஓர் அவஸ்தைதான்.

ஆற்றுப்பாலம் பக்கமாக ஆடு மேய்ச்சலுக்குப் போயிற்று. நிலக்கடலை விளைந்த செவல் தரைகளில்... மிச்சம் மீதியாகக் கிடந்த தட்டைப் பயறுச் செடிகள். 'தப்பு'க் கடலைகளின் மறுமுளைப்புச் செடிகள். குஞ்சாம் புல். காய்ந்த கடலைக் கொடியின் இலைச் சருகுகள், குட்டிகள் மனசில்லாமல் மேய்ந்தன.

ஆடுகளும், குட்டிகளும் மேய்ந்து கொண்டிருக்கின்றன. செவல் காடு முடிகிற இடத்தில் இறவைப் புஞ்சைகளின் துவக்கம். பம்ப்ஷெட் கிணறுகளும், தோட்டப் பசுமைகளும், அகத்தி வரிசைகளுமாய்...

இறவைத் தோட்டப் பசப்புகளை நோக்கி மெள்ள மெள்ள ஆடுகளும், குட்டிகளும் நகர்ந்தன. இவனும் பின்னாடியே போனான். வெயிலின் தகிப்பு, தோல் காந்தல்.

ஒரு சிற்றோடை. சீமைவேலி மரங்களும், எருக்கஞ் செடிகளும், அத்திச் செடிகளுமான பாறை முடிச்சான ஓடை, ஓடையிலிருந்து துவங்குகின்ற மிளகாய்த் தோட்டங்கள்.

வெயிலுக்கு அரண்டு போய் சீமைவேலி மரத்து நிழலில் நின்றான். ஆட்டுக் கம்பை ஒருச்சாயலாக ஊன்றி, அதன் மேல் கம்மங் கூட்டைக் கவிழ்த்து, உடம்பு முழுவதையும் அதில் சுமத்தி நின்றான். காந்தலான நிழல்தான். வெக்கை சுவாசம் விடுகிற நிழல் என்றாலும்... வெயிலின் கொடுமைக்கு உக்கிரம் இல்லை.

ஆடு, குட்டிகளை அரைப் பார்வை பார்க்கிறான். குறுக்கும் மறுக்குமாய் ஓடுகிற அணில்கள்.. கரட்டான்.

பூச்சிகளைக் கொத்துகிற மைனாக்கள். வேலி மரத்து நீள் விளார்களின் நுனியில் உட்கார்கிற கரிச்சான்கள். புதர்களுக்குள் தவ்வித்தவ்வி குதிக்கிற செம்போத்துப் பறவைகள்.

விளையாட்டு வயசு செந்தட்டிக்கு. எதையும் வேடிக்கை பார்க்கிற தம்பலப் பூச்சி மனசு. குதூகலமாக குதித்து விளையாடிக் கொண்டிருக்கிற அணில் மனசு.

வாட்டும் தனிமைத் தீயிலிருந்து தப்பித்தோடி முகம் புதைக்கிற தனிமை ரசனை.

''எவண்டா... வெள்ளாமையிலே ஆட்டை மேய விடுறது? எந்தச் சிறுக்கிபுள்ளே ஆடு மேய்க்கிறது?''

வசவுச் சீற்றம். ரோஷ மனசைத் தொட்டு சுட்டுத் தகிக்கிற வசவுகள். 'விர்ர்ர், விர்' ரென்று பறந்து வருகிற கற்களுக்குப் பயந்த.. 'தட, புட' வென்று ஓடி வருகிற ஆடுகள். அதன் கள்ளப்பார்வைகள்.

பகீரிடுகிறது செந்தட்டிக்குள். பயத்தின் நடுக்கம், மன ஆணிவேரின் நுனி வரைக்கும். பயத்தில் ஒண்ணுக்கு வந்துவிடுகிற செந்தட்டி.

வெலவெலத்துப் போய் ஓடைக் கரையேறுகிற செந் தட்டியின் காய்ந்த தலைமுடியை கொத்தாகப் பற்றிப் பிடிக்கிற முரட்டுக் கரம். கொலை வெறி மூர்க்கமுகம்.

''சின்னச் சாதி நாயே... முளகாப் புஞ்சையிலே ஆட்டை விட்டு மேய்க்கணும்னா.. ஒனக்கு எம்புட்டு மப்பு இருக்கணும்டா?'' குதூகலமாக குதித்து விளையாடிக் கொண்டிருக்கிற அணில் மனசு. சீற்றமும் தெறிப்புமாய் வந்து விழுகிற வார்த்தைத் தீக்கங்குகள். இடது கை தலை முடியை பற்றிக் கொள்ள... வலது கையால் 'சப்பு, சப்'பென்று அறைகள். தீப்பறக்கிற அடிகள். காய்த்த கையின் மூர்க்க அடிகள்.

''போடா... நாயே... ஆட்டைப் பத்திக்கிட்டு...'' வேகமும் வெறியுமாக விரட்டுகிற புஞ்சைக்காரர். ''ஐயய்யோ... ஐயய்யோ...'' என்று கதறித் துடித்த அந்தப் பிஞ்சுக்குட்டியின் சோகக் கதறல், அனாதையாக அலைந்தது அந்த வனத்தில்.



# 6

''அம்பது கிராம் சேவு குடுங்க'' கடை வாசலில் நிற்கிற வீரபாண்டி. குழாய் மடிப்பாக தாளைச் சுருட்டி, சேவைப் போட்டு தருகிற கடைக்காரர். வாங்கிய வீரபாண்டி ஒரு நீளச்சேவை வாயில் வைத்து 'நறுக், நறுக்'கென்று கடித்தான். அடி மனசுக்குள் இனம் புரியாத வெறுமை. காரச்சேவில் பங்கு கேட்காத சூன்யம். ''இந்தாடா'' என்று பாதியை பகிர்ந்து தந்தால், ''கொண் டாடா...'' என்று வாங்குகிற செந்தட்டி இல்லை. தோழமை இல்லை. சிரித்த முகமில்லை. மனசின் பாதி இல்லை. மனசின் நட்புப் பசி. செலுத்துவதற்கான அன்பு, நெஞ்சில் இருக்கிறது. அதைப் பெற்றுக் கொண்டு, மகிழ்ச்சி தருகிற நண்பன் இல்லை.

செந்தட்டி இல்லாமல் போனது... வலது கை பறி போனது மாதிரி இருக்கிறது வீரபாண்டிக்கு. அவன் இல்லாமல் போன பிறகு தான்...அவனது அருமை தெரி கிறது. அண்மையின் அழகு புரிகிறது. இனிமையான சிரிப்பின் ஒளி தெரிகிறது. நட்பின் ஆணிவேர், தனது நெஞ்சின் அடியாழம் வரை பரவிப் படர்ந்திருப்பதை மங்கலாக உணர்கிற வீரபாண்டி.

சேவு கொறித்தான். கொறித்தாலும் ருசியை உணராத மனநிலையில் வீரபாண்டி. கண்ணோர ஈரச்சுமையில் செந்தட்டியின் நினைவுகள்.

பெல்லடிக்கிற சத்தம். பிள்ளைகள் சட்டென்று சுறுசுறுப்பாகின்றன. ஓட்டமாய் ஓடுகின்றனர். வீரபாண்டியும் ஆறாம் வகுப்பில் போய் உட்கார்ந்தான். அவனையும் மீறி பாய்கிற பார்வை. நாலாவது பெஞ்சில் செந்தட்டி உட்கார்ந்திருந்த இடம். இப்போது... ரெங்கன் உட்கார்ந்திருக்கிறான்.

ஏமாற்றத்திலும், மெல்லிய வேதனையிலும் வீரபாண்டி. 'ஆடு மேய்க்கிற செந்தட்டிப் பய... நம்மளைப் பத்தி நெனைப்பானா?' என்றொரு நினைவும் குறுக்கு வெட்டாகப் பாய்கிறது.

சாயங்காலம். ஏறக்குறைய கடைசி பீரியடு. முதல் வரிசையிருக்கிற வீரபாண்டியை பார்க்கிற பியூன். வகுப்பு வாத்தியாரிடம் சொல்கிறார்.

''சார்... வீரபாண்டியை எச்.எம். வரச் சொன்னாரு''

''வீரபாண்டி... ஆபீஸ் ரூம் போய்ட்டு வா...''

வீரபாண்டி எழுந்தான். எல்லாப் பிள்ளைகளும் என்னவோ ஏதோ என்று நினைத்து, 'விலுக், விலுக்' கென விழிக்கின்றனர். இவனுக்கும் புரியவில்லை. புதிராக இருக்கிறது. ஒரு காரணமும் இருப்பதாகத் தெரியவில்லை.

வீரபாண்டிக்கு எச்.எம். என்றாலே வெறுப்பாக இருக்கும். பார்த்தால், எரிச்சலாக இருக்கும்.

ஒல்லியான உடம்பு, ஒட்டடைக்குச்சி மாதிரி உயரம், இதில் 'அழகேந்திரன்' என்கிற நினைப்பு வேறு. இங்கிலீஷ் பாடம் நடத்தவருவார். ஒருவரிகூட புரியாது. கிராமர் சொல்லித் தரவே தெரியாது. இதில் பெரிய அறிவாளி. சாதனையாளர் என்ற சுயபெருமிதம் வேறு.

எதற்கெடுத்தாலும் தன்னையே உதாரணமாகக் காட்டிப் பேசி, அறிவுரை கூறுகிற தற்பெருமை. காறித்துப்ப வேண்டும் போலிருக்கும்.

முழுக்கைச் சட்டை, நுனிக் கையை மட்டும் மடித்து விட்டிருக்கிற ஸ்டைல். பேண்டுக்குள் இன் பண்ணியிருப் பார். பார்த்தாலே அசிங்கமாக இருக்கும். பின்புறம் மட்டும் தனியே போகிற மாதிரி இருக்கும் நடக்கையில்.

விரலிடுக்கில் எந்நேரமும் சிகரெட்டின் புகை. உதடு காய்ந்து உலர்ந்து போய்... முகமே லட்சணமில்லாம லிருக்கும். அருள் கெட்டு கிடக்கும். இதில்... ஒரு ஏளனச் சிரிப்பு பார்ப்பார். அசல் சோளப் பொம்மை மாதிரித்தான் தோற்றம்.

''என்ன சார்...''

வாசலில் போய் நின்றான். நிமிர்ந்து பார்க்காமல் எச்.எம். கால் கடுக்க நிற்கிற இவனுக்குள் பொருமல். உதட்டுக்குள் கெட்ட வசவுகள்.

''சார்... நீங்க கூப்பிட்டீங்களாம்லே?'' குரலில் பணிவு.

''ஓ... வீரபாண்டியா? வாங்க சார்...நீங்க ரொம்பப் பெரிய ஆளோ?'' இன்னும் நிமிராமல் எழுதிக் கொண்டே, எகத்தாளமும் நக்கலுமாகக் கேள்வி. உள்ளுக்குள் குமுற லோடு மௌனமாக நிற்கிற வீரபாண்டிக்கு, எரிச்சலும் கடுப்புமாக இருக்கிறது.

''ஏண்டா... ஒனக்கு ரொம்பத் திமிரா? பெரிய லேண்ட் லார்டு மாதிரியா... நீ?'' எச்.எம். சார்லஸின் அதட்டலான கேள்வி.

''என்ன சார்?'' இப்போது குரலில் பணிவில்லை. சற்றே விடைத்த குரல்.

''மூனாப்பு டீச்சர் தெக்குத் தெருவிலே ஒரு புக் வாங்கிட்டு வரச் சொன்னாகளா? வாங்குறதுக்கு நீங்க போக மாட்டீங்களோ?

''புக் வாங்கிக் குடுத்துட்டேனே... சார். அது பாடப் புத்தக மில்லே. குமுதம்.''

''நீங்க போகலியாம்லே?''

''ஆமா. நாந்தான் ரெங்கனை அனுப்பி வாங்கிட்டு வரச் சொன்னேன். சார்''

''ஏன்...? அதானே திமிரு? ஒசத்தி? நரியை வேலைக்கு ஏவுனா... அது நாய் வாலை அனுப்புற மாதிரி...''

எச்.எம். சார்லஸை விடைப்பாகப் பார்க்கிற வீரபாண்டி. தேவையில்லாமல் வம்பு வளர்க்கிற அவரது நெஞ்சுக் கொழுப்பு. பக்கத்து ஊரில் ரெண்டு தடவை அடிபட்ட இந்த ஆளுக்கு, இன்னும் அறிவு வரவில்லை. மப்பேறிப் போய் திரியுற ராஸ்கல்.

''என்னடா... மொறைக்குறே?''

டேபிளில் நோட்டுகளுக்குள் கிடந்த பிரம்புக் குச்சி யோடு எழுந்து வருகிற அவன் மூஞ்சி. சிகரெட்டு கையில் வெந்து கரிக்கட்டையாகத் தொங்குகிற அடி உதடு. கண்ணில் கோபம்.

பயமில்லாமல் இவன் முறைத்துப் பார்ப்பதே அவரைச் சீண்டுகிறது. வன்முறைக்குத் தூண்டுகிறது. தனது அதிகார இருப்பை உணர்த்த ஆசைப்படுகிறது. முகமெல்லாம் கோபக் கனல்.

என்னடா'' ஆறாங்கிளாஸ் பொடிப் பயலுக்கு இத்தனை திமிரா? நா யாரு தெரியுமாடா...?

''தெரியுமே...''

''என்ன தெரியும்டா?''

''மூனாங்கிளாஸுக்குப் பாடம் நடத்த வேண்டிய ஆளு... மேனேஜருக்கு பொண்டாட்டியைக் கூட்டிவிட்டு... இந்த ஹை ஸ்கூலுக்கு எட் மாஸ்ட்ரா வந்துருக்குற ஆளு. தராதரமில்லாம நடந்து... ரெண்டு தடவை அயலூர்லே அடிவாங்குன ஆளு... இந்த ஸ்கூலோட தரத்தையே சீரழிக்குற ஆளு...''

வெலவெலத்துப் போன சார்லஸ். இப்படியோர் எதிர்த் தாக்குதலை எதிர்பார்க்கவில்லை. மூர்க்கமான தாக்குதல். அடிமனசில் தன் மானத் தகிப்பை எகிற வைக்கிற வார்த் தைகள். அவமானத் தீயில் வாட்டி வதைக்கிற வரிகள்.

அவருக்குள்ளிலிருந்து சண்டாளமாக எழுந்த மிருக வெறி.

''ஏலே...ய்''

பாய்ந்து வந்த சார்லஸின் உயிர் ஸ்தலத்தில் ஓங்கி ஒரு குத்து. ''ஐயய்யோ...'' என்று மரண ஓலமாய் குன்றிப் போய்... குத்துப்பட்ட இடத்தைப் பற்றிக் கொண்டு... சார்லஸ் குனிந்த போது...

வெளியே வந்து விட்டான், வீரபாண்டி நடு மைதானத் தில் வந்து நின்றான். அங்கிருந்து தலைமையாசிரியர் எனும் அந்த ஆளைப் பார்த்தான். இன்னும் கோபமாய் பாய்ந்து வருகிற சார்லஸ்.

''நில்ரா... தேவடியா மகனே... நில்ரா...''

குனிந்து நிமிர்ந்த வீரபாண்டியின் வலது கையில் ஒரு கல்.

கரட்டாணை குறி வைத்து எறிந்து பழகிய அனுபவங்கள்.

'விர்ர்ர்'' ரென்று பறந்து வந்த கல், வாத்தியாரின் நெற்றிப் பொட்டில் மோதிய வேகம். 'குபுக்'கென்று வந்த ரத்தம்...

''ஏலேய்... நெட்டையா... 'தேவுடியா மகனேன்'ன்று நீ சொல்லியிருக்கே... என்னை. இதுக்கு நீ பதில் சொல்லாம... நீ... இந்த ஊரைவிட்டு உசுரோட போய்ச்சேர முடி யாதுடா...''

கல்லின் தாக்குதலைவிட... இவனது சொல்லின் தாக்குதல். அவருக்கு கண்ணைக் கட்டிக் கொண்டு வருகிற மாதிரியிருந்தது. சிமிண்ட்டுக் கலர் சட்டையில் வழிந்த ரத்தம்.

வீரபாண்டி வீட்டைப் பார்த்து ஓடிவந்து விட்டான்.

அன்றைக்கு மதியமே -

பள்ளி மைதானத்தில் வீரபாண்டியின் உறவுக்காரர்கள். சார்லஸ் நனைந்த எலியாக நடுங்கிக் கொண்டு விழித்தார். ஆள் ஆளுக்கு கத்துகின்றனர். அடிப்பதற்காக சீறுகின்றனர்.

''ஏலேய்... நெட்டையா, இங்க வாடா...'' அதட்ட லான அழைப்பின் இறுக்கமே, சார்லஸின் அடி வயிற்றைக் கலக்கியது.

''வீரபாண்டி என்ன தப்பு பண்ணுனான்? கூப்புட்டு கண்டிச்சு, வம்பு வளர்க்கின்ற அளவுக்கு... என்னகுத்தம் பண்ணுனான்? இவுக அம்மா... 'தேவுடியா'ன்னு உனக்கு எப்படித் தெரியும்? அதையும் நீ... ப்ரூவ் பண்ணு. அப்புறமா... நாங்க வீரபாண்டியை விசாரிச்சு தண்டிக் கிறோம்.''

ஊரே திரண்டு... சூறாவளியாக சுற்றி வளைத்து, பள்ளியை சுழற்ற... வந்து சேர்ந்த கல்வி அதிகாரிகளும், மேனேஜரும் எச்.எம். சார்லஸை வேறு எங்கோ தூக்கி விட்டனர்.

''போதும்... போதும்... படிச்சுக் கிழிச்சது'' என்று கோபமாய் கத்திய வீரபாண்டியின் அய்யா... தன்

கையிலிருந்த ஆட்டுக் கம்பை இவன் கையில் திணிக்க... இவனுக்கொன்றும் வேதனையாக இல்லை.

'செந்தட்டியோட திரியலாம்' என்ற சந்தோஷத்தில் கும்மாளமிடுகிற வீரபாண்டி மனசு. ரெக்கை கட்டிப் பறந்தான்.



# 7

**பொ**ழுதடைந்து, 'கரு கரு' வென்று மயங்குகிற நேரம். இருட்டியும் இருட்டாமலிருக்கிற சமயம்.

ஏதோ... துரத்தப்பட்டு அற்றலைந்து வந்ததுகளைப் போல துயரக் கதறல்களும், கனைப்புகளுமாக வந்து சேர்கிற ஆடுகளும் குட்டிகளும்.

'எங்க... செந்தட்டியைக் காணலே...' என்று பாதையை நிமிர்ந்து பார்த்த கொண்டி வேலம்மா, கண்ணில் மனசை வைத்துத் தேடித்துழாவியவள், தாழ்வார முள்படலை திறந்து விட்டாள்.

நல்ல மேய்ச்சல். நல்ல வயிறெடுத்து, புடைப்பாக இருந்தது. ஆட்டுரலில் பழைய கஞ்சியோடு புளிச்ச தண்ணீரை ஊற்றினாள். ஆடுகளும் வந்து வாய் வைத்தன. குட்டிகளும் தான்.

தாகத்தில் தண்ணீரைப் போட்டு மண்டித் தீர்த்தன.

கொண்டி வேலம்மா ஆடுகள் முகம் பார்த்தாள். தவிட்டு நிற ஆடு, சினையாடு, சேதாரமில்லாமலிருந்தது.

ராத்திரிக்கு இரை இல்லை. இனிதான் பார்க்கணும்.

'வேலிப்படலை இழுத்துச் சாத்திவிட்டு... எங்க போய்ட்டான் ஏம்புள்ளே' என்று பாசப் பதைப்போடு தவித்தாள். கிழக்காமல் நீளும் 'தெருப்பாதையையே... தாகமும், ஏக்கமுமாய் ஏறிட்டு ஏறிட்டுப் பார்க்கிற தாய் மனசு.

விறகுக் குச்சிகளையும் சுள்ளிகளையும் பொறுக்கிக் கொண்டு... 'மேயப்போன ஆடு குட்டிக வீடு வந்துருச்சுக...' ''மேய்க்கப் போன ஏம்புள்ளையைக் காங்கலையே'' என்ற முணுமுணுப்போடு தொழுவத்திலிருந்து, வீட்டு முற்றத்துக்கு வந்தாள். மறுபடியும் தெருப்பாதைக்குப் போய்த் திரும்புகிற தாய்க்கண்.

'செந்தட்டி வந்தால்... தரணும்' என்று கடையில் வாங்கி வைத்த இந்த வறுவ (ஓலைச்சேவு)லும், பொறி கடலையும், தண்ணீர் சாலில் இருக்கிறது. காபியை விரைவாக கொதிக்க வைத்தாள். சுள்ளிக் குச்சிகளை ஒடித்து, அடுப்புக்குள் திணித்தாள். சட்டியின் அடிப் புறத்தை ருசித்து... மூன்று பக்கமும் உயர்கிற தீஜ்வாலைகள்.

''யம்மா...''

செந்தட்டியின் குரல். அடிவயிற்றுக்குள் புரண்டெழுந்து, பீறிட்ட ஆவலுணர்ச்சி. ''ஆ... வந்துட்டான்... எஞ்செல்லம்'' என்று வாரிச் சுருட்டிக் கொண்டோடிய கொண்டிவேலம்மா.

''என்னய்யா... ராசா!'' என்ற பரவச நெகிழ்வும், பரபரப்பான குரலோடும் வெளியே வந்தாள்.

கம்பை சுவரில் சாய்த்திருந்தான். இடுப்பில் கட்டி யிருந்த நூல் கயிற்றையும், பாட்டிலையும், தூக்குச் சட்டி யையும் கழற்றி, வாசல் படியில் வைத்திருந்தான். துவண்டு போய் வாசல்படியிலேயே சுருண்டு உட்கார்ந்திருக்கிற செந்தட்டி.

அறுத்துப் போட்ட கீரைத் தண்டாக வாடிக் கிடக்கிற மகன். கண் விழியாத இளங்குஞ்சு. இளங்குருத்து. கிழிந்து கிடக்கிறது.

இவளுக்குள் குலை கொதிக்கிறது. உள்ளுக்குள் பகீரிடுகிற அதிர்வலை.

''என்னய்யா... செந்தட்டி... என்னய்யா...'' பதற்றமும், பதைப்புமாக மண்டி போட்டு... மகனைத் தழுவி யணைத்துக் கொண்டு துடித்தலறினாள்.

''என்ன ராசா... காய்ச்சலா... மண்டையடியா?''

''இல்லேம்மா...'' உலர்ந்து ஒட்டிப் போன உதடுகளை பிரித்துக் கொண்டு அரை உயிராகப் பேசுகிற அவன்.

''பெறகென்னய்யா?'' துடித்துப் பதறிப் பதைக்கிற அம்மா முகத்தைப் பார்க்கிறான். பறவையாடுகிற கண்ணில் ஈரச்சுனை. கண்ணீர் தேங்கி நிற்கிற நீர்ச்சுனை.

''அடிச்சுட்டாக...''

''அடிச்சுட்டாங்களா... யார் டா... அந்தப் பாவி? அவன் கையிலே புத்து பெறப்புட... இந்தப் பச்சை மண்ணை அடிக்க எந்தப் பாவிக்கு மனசு வந்துச்சு?''

கேட்ட மாயத்தில் மனம் கொதித்துப் போன கொண்டி வேலம்மா. கோபக் கொந்தளிப்பும், தாய்மைத் தகிப்புமாக அவள். காய்ந்த முடிக்கற்றை அவள் முகத்தில் விழுந்து, அவளது பதற்றத்திற்கேற்ப அசைகிறது.

அம்மாவைப் பார்க்கிற செந்தட்டி. வெட்டுண்ட கிடாய் உடம்பாக துள்ளத் துடிக்கிற அம்மாவைப் பார்க்கப் பார்க்க... மனசுக்குத் தர்மசங்கடமாகிறது. அடிபட்ட வேதனையை விட... இது பெரும் பரிதாபமாக இருக்கிறது.

''அடிபட்டதைச் சொல்லாமலிருந்திருக்கலாமோ...'' என்றோடுகிற உள்மன நினைவு.

''சொல்றா... யார் அந்த நாயி...? சொல்றா?'' அழுகையும், ஆத்திரமுமாக கண்ணீர் சிந்துகிற பத்ரகாளியாக... அம்மா.

''கீழச் செவக்காட்டு ராமகிட்ணன்''

அவளுக்குள் தீக்கற்றையாக குப்பென்று எழுகிற வெறி. மகன் கன்னத்தில் விரல் பதிவுகள். ரத்தம் கன்றிப் போயிருக்கிறது. முக மெல்லாம், ஒரு மூர்க்கத்தின் தடங்கள்.

விருட்டென்று எழுந்தாள். கண்ணகிச் சீற்றம்.

''யம்மா... எங்க போற?''

''தண்ணீர் சால்ல் தீம்பண்டம் இருக்கு. எடுத்துத் தின்னு. இந்தாவாரேன்...''

''யம்மா... யம்மா... சண்டை, கிண்டை போட்டுராதே''

இவனுக்குள் பயப்படபடப்பு. 'என்னாகுமோ... ஏதாகுமோ' என்கிற பயபீதி. திகில் பரவல்.

''சின்னச் சாதி நாயே...'' என்று திட்டிய அந்த ஆங்காரம். பயமற்ற திமிர். தலைமுடியை பற்றிய கணத்தில்... 'எதுவும் பின் விளைவு வருமோ' என்ற தயக்கமில்லாமல்... ஓங்கி ஓங்கியடித்த வேகம்.

''சின்னச் சாதி பொம்பளையை மட்டும் சும்மாவுட்டுருவாரா?''

**இவனுக்குள் ஏதோ ஒரு பயங்கரத்தை எதிர்நோக்குகிற கிலி.**

**தீம்பண்டம் எடுக்கக் கூட மனசில்லை. மனசுக்குள் கலக்கம்.**

**வீரபாண்டியை நினைக்கிற மனம். பள்ளிக் கூடத்தில் சின்ன சின்ன தப்புகளுக்கெல்லாம், அடி வாங்கிச் சீரழிந்த பையன்கள். சின்ன சின்ன தப்புகள் செய்த செந்தட்டி, அடி வாங்காமல் தப்பிய ஆச்சரியம். வீரபாண்டியின் கூட்டாளி** என்கிற ஒரே அரண். அதுவே கவசம்.

அது இல்லே. இப்ப இல்லே... ஊருக்குள்ளே ஊறிப் போயிருக்கிற சாதி வெறி. எளிய சாதிக்காரனை தெரு நாயாக நினைக்கிற ஊர்ச்சட்டம். ஏளனமாய் மதித்து, எட்டி உதைக்கிற மமதை, சாதிய அதிகாரத்துவம்.

எளிய சாதிக்காரனுக்கு நாதியில்லை என்கிற ஒரே தைரியம். அவனுக்கும் வலிமையில்லை என்கிற தெளிவு. அதனால் அதிகாரம் செலுத்துகிற அக்கிரமம். கேட்பாரற்று அடிக்கிற மூர்க்கம். 'சின்னஞ் சிறு பூச்செண்டின் சிரசில் அடிக்கலாமா' என்கிற இரக்க உணர்வு துளியுமில்லாத காட்டு மிராண்டித்தனம்.

செந்தட்டிக்கு மனம் கசந்து வருகிறது. அழுகை அழுகையாக பொங்கிப் பிரவகிக்கிறது. நாசித்துளைகளில் மனசின் காந்தல். வீர பாண்டியை நினைத்து நினைத்து ஏங்கியழுகிற மனசின் அபலைத் தன்மை.

அம்மாவை... என்ன செய்றாங்களோ...

ராமகிட்ணன் வீட்டு வாசலில் பீடியை குடித்துக் கொண்டிருந்தார். பத்ரகாளியாக வருகிற கொண்டி வேலம்மா. காலடிச் சேலையை தூக்கி இடுப்பில் சொருகி

இருக்கிறாள். 'தக், தக்' கென்று தரையதிர வருகிறாள். வெயிலில் உழைத்தே கறுத்த திரேகம். விறைப்பும், ஆத்திரமுமாக வருகிற அவள்.

அவளது வேகமும், விறைப்பும். திகைக்கிற ராமகிட்ணன். கீழச்செவக்காட்டில் புஞ்சையில் ஆட்டை விட்ட சின்னப் பயலை அடித்த ஞாபகம், 'அவனோட ஆத்தாளா இருப்பாளோ...'

''வரட்டும்... வரட்டும்... வெள்ளாமையிலே வெள் ளாட்டைவுட்டு மேய்க்கிற பயலை... முத்தமா கொஞ்சு வாக? நாலுதட்டு தட்டி... நாயை வைக்கிற எடத்துலே... வைக்கத்தான் செய்வாக?''

வன்மத்துடன் உறுமிக்கொள்கிற ராமகிட்ணன்.

''ஏம்புள்ளையை என்னத்துக்குச் சாமி அடிச்சீக? பத்துவிரலும் பதியுறாப்புலே அடிச்சிருக்கீகளே...''

உள்ளடக்கிய கோபத்தீயின் வெக்கையுடன் கைநீட்டிக் கேட்கிற கொண்டி வேலம்மா. அவள் முகத்தில் வியர் வைக் காடு. குமுறலும் கொந்தளிப்பும் கொப்பளிக்கிற கண்கள். அதை வெளிப்படுத்த இயலாத சாதிய அச்சம்.

ராமகிட்ணன் மட்டியை கடிக்கிறார். கோபத்தில் ''ஏய்ச்... சின்னச் சாதிச் சிறுக்கி... கை நீட்டிப் பேசுற பழக்கமெல்லாம் இங்க வைச்சுக்கிராதே. எங்க தெருவுலே ஏறி வந்து... வீட்டு வாசப்படியிலே நின்னு... கை நீட்டிப் பேசுனா... தொலியை உரிச்சிருவேன். பாத்துக்க...''

மிரட்டும் தோரணையில் உறுமலான குரலில் நடுங்கிப் போகிற கொண்டி வேலம்மா. பயந்து நொறுங்கிப் போகிற அவள். 'சின்னச் சாதிச் சிறுக்கி' என்கிற திமிர். அதைக் கூட எதிர்க்க முடியாத பலவீனத்தில் இவள்.

''தகப்பனைப் பறிகுடுத்த சின்னப்பய... எம்மகன். அவனை இப்புடிப் போட்டு அடிச்சுட்டீங்களே... சாமி...'' கொஞ்சலும் கெஞ்சலுமாய் நனைந்து துவண்டு போன அவளது குரல். தாய்மைக் கோபம், சாதிய மூர்க்கத்தில் உருச்சிதைந்து போகிற பரிதாபத்தில், அழுது மூக்குச் சீறுகிற அவள்.

''ஓம் பயலை... காடு கரைகள்லே எச்சரிக்கையா இருக்கச் சொல்லு''

அறுபட்ட தலையாக தொங்கிப் போய்... துவண்டு போகிறாள்.



## 8

...''ஏம்புள்ளையைப் போட்டு அடிச்சு நொறுக்கிட்டு... என்னையும் அரட்டுதீகளே... இது ஞாயமா, சாமி? மேலே இருக்கிற சாமி இதையெல்லாம் பாக்காதா, கேக்காதா?''

கொண்டிவேலம்மாவின் கொதிப்பான கேள்வி. ரெண்டு கையையும் ஏந்தி... ஓங்கி... சாபம் விடுகிற தோரணை.

ராமகிட்ணனுக்கு கறுத்த மீசை துடிக்கிறது. நாக்கை வளைத்து உருட்டிக் கொண்டு, கண் முழியை உருட்டுகிற பயங்கரம்.

''ஏய்க்... கொண்டி, என்ன சாபம் வுடுதீயா? நீ விடுற சாபம் என்னோட மயித்தைக் கூட புடுங்கிக் கிடாது. புள்ளையை ஒடுக்கி வளக்காம வுட்டுட்டு... இங்க என்ன மயிரைப் புடுங்க வந்துருக்கே...?''

''ஒரு பொம்பளை கிட்டே பேசுற பேச்சா... இது சாமி? மயிரு, கியிருன்னு மானாங்காணியா பேசுறீங் களே... ஏம் புள்ளையை அடிச்சா... எம் மனசு கொதிக் காதா? பத்து மாசம் செமந்து, முக்கிப் பெத்த பொட்டச்சி நெஞ்சு தாங்குமா, சாமி? ஒங்க புள்ளையை வேற யாராச்சும் இப்படி அடிச்சிருந்தா... நீங்க என்ன செய்வீக... சாமி?''

''நாங்க யாரு...? என்ன சாதி? இந்த ஊர்லே எங்க ராஜ்யம் எப்புடி? எங்க புள்ளைமேலே கைவைக்க, எந்த நாயாச்சும் நெனைப்பானா? நெனைக்குறதுக்குக்கூட தைர்யம் வருமா? பிய்ச்சிருவோம்... பிய்ச்சு''

''ஏம்புள்ளைக்கு அந்த நீதி இல்லியா சாமி? எம்புள்ளை மேலே வச்ச கையை பிய்க்க வேண்டாமா...?''

கண்ணகிச் சீற்றமாக கோபமாக கேட்கிற கொண்டியை வெறியோடு பார்க்கிற ராமகிட்ணன். சத்தம் கேட்டு, அங்கிட்டும் இங்கிட்டுமாய் வந்து சேர்ந்த சுயசாதிக் காரர்கள்.

ஒரு கெழுத்தி மீசைக்காரன் வேட்டியை வரிந்து கட்டிக் கொண்டு பாய்கிற தீவிரம்.

''என்ன மச்சான், இந்த எளிய சாதிப் பொட்டச்சிக் கிட்ட சரிக்குச்சரியா பேசிக்கிட்டு இருக்கீக? இவா... உங்க கையை பிய்க்கணும்ங்கா. நீங்களும் கேட்டுக்கிட்டு இருக்கீக...'' என்று பாய்ந்த அவன்... கொண்டிபக்கம்

'விருட்'டென்று திரும்பி... நாக்கை உருட்டிக் கடித்துக் கொண்டு சீறினான்.

''ஏய்க், சிறுக்கி மகளே... சின்னச் சாதி நாயே... எங்க தெருவுலே வந்து, எங்க மச்சானையே கையை பிய்க் கணும்ங்கீயா...? ஏண்டி... தராதரம் தெரியாத முண்டை, இப்ப ஒங்கையை பிய்ச்சா... யாரு கேப்பாக?''

வேகமாக நெருங்குகிற கெழுத்தி மீசைக்காரன். கொண்டியின் காய்ந்த கூந்தலை இடது கையால் அழுந்தப் பற்றி, 'வெடுக்'கென்று இழுக்கிற மூர்க்கம் இழுத்த வேகத்தில் அலைவுறுகிற கொண்டி. தள்ளாடி தடுமாறி... சரிந்து தரையில் இழுபடுகிற அவளின் அடிவயிற்றில் மிதிக்கிற ராமகிட்ணன்.

''ஐயய்யோ... யம்மா...வ்...'' என்றலறுகிற கொண்டி. அவளது வலது கையை வெட்டி வெட்டி இழுத்துப் பிய்க்கிற கெழுத்தி மீசைக்காரன்.

''அய்யோ... என்னைப் போட்டு மிதிக்சுக் கொல்லுதா களே... பொட்டச்சிகிட்டே பலத்தைக் காட்டுகிற இந்தப் பாவிகளை, தட்டிக்கேக்க ஒரு நாதியில்லியா? ஒரு மனுச மக்க இல்லியா?''

அழுகையும், அவலமுமாக... கதறுகிற கொண்டி. சுற்றி நிற்கிற நாலைந்து பேரும் கூட கெழுத்தி மீசைக்காரனை ஊக்கப்படுத்துகின்றனர்.

''கொழுத்த சிறுக்கி... சின்னச் சாதிக் கழுதை... நாலு போடு போட்டாத்தான் அறிவு வரும். மனசுலே பயம் வரும்...''

கையை பிய்க்கிற மூர்க்கத்தில் அந்த மீசைக்காரன். உயிர் போகிற அவஸ்தையில் துடித்துக் கதறுகிற கொண்டி...

''யம்மா...,'' என்று அலறிக் கொண்டு கண்விழித்த செந்தட்டி. வீட்டு வாசல்படியில் துவண்டு சரிந்து உட்கார்ந்திருந்தவன், களைப்பில் அயர்ந்து... வாசல் நிலையில் தலை சாய்த்து... அப்படியே கண் அசந்து விட்டான். கனவின் அச்சத்தில், குப்பென்று வியர்க்கிறது.

தெருவின் நீளத்தை கண்ணால் அளக்கிறான்.

இன்னும் அம்மா வரவில்லை. தெருவில் போகிற எருமைகள். கடைக்கு வந்து விட்டுப் போகிற பெண்கள். இடுப்பில் வைத்த குப்பைக் கூடைப் பாரத்தில் ஒருச் சாயலாக நடக்கிற ஒரு கிழவி.

அம்மாவைப் பற்றிய கனா. கனாவின் பயங்கரம். ஓநாய்களுக்கிடையில் சிக்கி, கடிபடுகிற புறாவாக... அம்மா. அடிவயிற்றில் மிதி வாங்குகிற அம்மா. வெட்டி இழுக்கப்படுகிற கையின் வலியில் துடிக்கிற கொடூரம்.

செந்தட்டிக்குள் பதற்றம். பய உணர்ச்சியில் நடு நெஞ்சு குளிர்கிறது. பகீரிட்டு வெறுமையுறுகிற அடி வயிறு. உச்சி மயிர் இப்போதும் காந்துகிற உணர்வு.

துவண்டு சரிந்து வருகிற அம்மா. பத்ரகாளியாக படையெடுத்துப் போனவள், தோற்றுச் சாய்ந்த துரோபாதையாக வருகிறாள்.

இவனுக்குள் திகில். எழுந்து ஓடினான். தவிப்பும் பதைப்புமாக... பாய்ந்தோடுகிற செந்தட்டி.

''ம்மா... ம்மா...''

ஓடிப்போய் அம்மாவைக் கட்டிக் கொண்டான்.

''யம்மா... அடிச்சாகளா...? ஒன்னையும் அடிச்சாகளாம்மா?''

அரண்டு மிரண்டு நடுங்கிப் போய் வந்து கொண்டிருந்த கொண்டி, மகனின் கேள்வியில் துடித்துப் போனாள். 'அம்மாவை அடிச்சிருப்பாகளோ'' என்று பயந்து துடித்திருக்கிறான் பாவம்.

தன் வயிற்றில் முகம் புதைத்து, இடுப்பைச் சுற்றி வளைத்து, அப்பிக் கொண்டிருக்கிற மகனின் காய்ந்த தலைமுடியை மிருதுவாக வருடினாள். அவனது திகிலும், கிலியும் அவளுக்குள் உணரப்படுகின்றது.

''ஏம்மா... அடிச்சுட்டாகளா?''

''அடிக்கலேப்பா... அம்மாவை அடிக்கலேப்பா...''

தைரியம் சொல்கிற தாய். அவனது பிடரியில் கை வைத்து, தடவி விட்ட பாச உணர்வு. முகத்தைத் தடவி.. தன்னோடு அணைத்துக் கொண்ட கொண்டிவேலம்மா.

''அடிக்கலியாம்மா... அடிக்கலியாம்மா...?'' என்று பரபரத்துக் கேட்டு, ஆறுதலைடைகிற மகன். பயத்தில் நனைந்த கோழிக் குஞ்சின் நடுக்கமாக, அவன் மனசு.

''இல்லேப்பா... இல்லேப்பா... இல்லே கண்ணு''

''அரட்டுனாகளாம்மா...?''

''ஆமய்யா ராசா. அவுக மேசாதிக்காரவுக. ஏகப்பட்ட தலைக் கட்டுக. நம்மளை கட்டி வைச்சு அடிக்கலாம். வீட்டுக்கு தீ வைக்கலாம். ஒன்னையும், என்னையும் என்ன வேணும்னாலும் செய்யலாம். நமக்கு யாரு இருக்காக? நம்ம கிட்டே என்ன சத்து இருக்கு?''

குரலின் உடைவிலேயே மனசின் சோகம் வழிகிறது. சொல்லி முடிக்கிற போது அழுகையும், விம்மலுமாக அம்மா. அவளது கண்ணின் சுடுநீர் இவனது பின் கழுத்தில் விழுகிறது.

''என்னை அடிச்சதுக்கு நாயம் கேட்டீயாம்மா?''

''கேக்க முடியுமாடா...? கேட்டா... நம்மளை உசுரோட வுடுவாகளடா? கைநீட்டிப் பேசுனதுக்கே... உசுர் அ(று)ந்து போற மாதிரி அதட்டுறாகளே...''

இருவரும் நடந்து கொண்டே வீடு வருகிறார்கள். காலைக் கட்டிக்கொண்டே வருகிற செந்தட்டி.

அம்மாவின் கண்ணீர் சொற்களில் இவன் உணர்கிற குரூரம். சமுதாய ஓநாய் முகங்கள். சாதியப் பற்களின் ரத்த நெடி.

''யம்மா... யம்மா... என்னை அடிச்சா... யாரும் கேக்க மாட்டாளாம்மா? நமக்கு நாதியில்லியாம்மா? யாருமே யில்லியாம்மா...? இம்புட்டு மானங்கெட்டுப் போய்... நாம இந்த மண்ணுலே, உசுர் வைச்சு இருக்கணு மாம்மா...?''

செந்தட்டியின் விசும்பலான கேள்வியில் மன விரக்தி. அவலப் பேருணர்ச்சி. 'செத்துப் போகலாமா' என்று சொல் கிற அளவுக்கு, உடைந்து சிதறிப்போன அவனது நம்பித் கைகள்.

அப்படியே துடித்துப் போனாள் கொண்டிவேலம்மா. அடிவயிற்றில் பற்றிக் கொண்ட தீ. குலை பதறிப்போய் கொதிக்கிற மனசு.

''அய்யோ... எம்மகனே... ஏண்டா... இப்படிச் சொல் லுதே? இப்படியும் கதியத்துப் போனாமே... நாம...'' என்று கதறிக் கொண்டே அவனை முழுசாகத் தழுவிக் கொண்டவள் உடைந்து அழுதாள்.

''ஐயய்யோ... நம்மகதியும் இப்படியாகணுமா? எம்புள்ளே ஆடுமேய்ச்சு சீரழியுறது மட்டுமில்லாம, அடி பட்டும் சாகணுமா?'' என்று அழுது புலம்புகிற அம்மா.

இவனும் அழுகிறான். வீட்டு முற்றத்தில் குத்துக்கால் வைத்து உட்கார்ந்து, மகனைச் சேர்ந்து கட்டிக் கொண்டு, ஆவி பதற அழுகிற கொண்டிவேலம்மா. இவனும் பீதியும், கிலியுமாக இணைந்து அழுகிறான் விசும்பி விசும்பி.

அந்த அழுகையிலும் -

செந்தட்டியின் மனசுக்குள் வீரபாண்டி. வீரபாண்டியை அதட்டியதற்காக சார்லஸ் வாத்தியார் பட்ட பாடு. தான் அடிபட்டும்... வதைபட்டும்... கொடுமைப்படுகிற மூர்த்தண்யம். இதுதான் நமது சமூகம்.



# 9

ஆறு கிடந்தது, இந்தியாவைப் போல. நீரில்லை. மணற்கொள்ளையர்களிடம் தனது மேனியெழிலையும், இளமையையும் முழுசாகப் பறிகொடுத்திருந்தது. ஒரு கைப்பிடி மணல் கூட மிஞ்சவில்லை.

சீமைவேலி கூட பாறைகளின் இரண்டு இடுக்குகளில் தான் வேரடித்திருக்கிறது. காய்ந்துபோன பாறை முடிச்சுகளும், வறண்ட களிமண் திட்டுகளும், புதராகிப் போன முட்கவைகளுமாக... ஆறு, சீரழிந்து கிடக்கிறது. செத்துப் போன சாரைப்பாம்பு வெறும் எலும்புக் கூடாக உலர்ந்து கிடப்பதைப் போல கிடக்கிறது ஆறு.

அந்த எலும்புக்கூடுகளுக்கிடையே இரைதேடி... கரடு களை நக்குகிற ஆடுகள், குட்டிகள், அங்கொன்றும், இங்கொன்றுமாய் காலார, சுதந்திரமாக அலைகின்றன. ஆற்றின் மேட்டுக் கரையில் செந்தட்டியும், வீரபாண்டியும்.

வீரபாண்டி கைலி கட்டியிருக்கிறான். வயதுக்கு விஞ்சின தோரணையைத் தருகிறது கைலி. மேலே முண்டா கலர் பனியன். கட்டம் போட்ட துண்டு. ஆட்டுக் கம்பு. அவனது நாசிக்கடியில் பூனைரோமங்கள். சின்ன சின்ன பருக்கள் தெறித்திருக்கிற கன்னம். உடம்பு முழுக்க ரோமங்கள். மடித்துக் கட்டிய கைலி. தொடையில் கூட ரோம அடர்த்தி. முழுத்த இளவட்டம் போன்ற தோற்றம்.

செந்தட்டி மஞ்சணத்தி மரநிழலில் நிற்கிறான். பக்கத் திலேயே ஒரு கருவேல மர நிழல். அதில் நிற்கிற வீரபாண்டி.

மதிய வெயில் கொளுத்துகிறது. ஏறிட்டுப் பார்த்தால்... வெள்ளிப்பாளமாக தகதகக்கிற வெயிலில் கானல் அலை கள். இமைகளின் உள்பக்கம் எரிக்கிற வெயில்.

''செந்தட்டி... சாப்புட்டுருவோமாடா...''

''வேண்டாம்டா. இன்னும் கொஞ்சம் நேரமாகட்டும். உச்சியிலிருக்கிற பொழுது, நழுவிச் சரியட்டும். சாப்புட ஆரம்பிச்சுருவோம்டா...''

''மேய்ற ஆட்டையே பாத்துக்கிட்டு இருக்கவா? பொழுதுக்கும் இப்படியே சும்மா...வே, நிக்கவா? போரடிக்குதுடா...''

''ஆடு மேய்க்குறதுன்னா... சும்மாவா? அப்படித்தான். நீயெல்லாம் படிச்சிக்கிட்டிருக்கணும்டா''

''ம்''

''நாந்தான். தலையெழுத்து. கரண்டுலே கைபட்டு அய்யா மண்டை சாய்ஞ்சு போச்சு. நாதியத்த குடும்பத்துக்கு நாந்தான் ஆடு மேய்ச்சாகணும். ஒனக்கென்ன தலையெழுத்தா?'' ''இல்லேடா... வீரபாண்டி, சார்லஸ் சார் கூட இம்புட்டு மோதியிருக்க வேண்டியதுல்லேடா...''

''நீ சொல்றது சரிதாண்டா... ஆனா, ஒன்னோட பழகிப் பழகி... சுகம் கண்டுட்ட மனசு, நீயில்லாத கிளாஸ்லே இருக்கவே பிடிக்கலேடா... என்னத்தையோ பறிகுடுத்த மாதிரியிருந்துச்சுடா...''

சொல்லிக் கொண்டே வந்த வீரபாண்டியின் குரல், தடுமாறியது. ஈரத்தில் நனைந்து கரகரத்தது. குரலின் தழுதழுப்பில்... அவன் மனசும், நட்பும் முகம் காட்ட...

செந்தட்டி நெகிழ்ந்து போனான். அவனுள் ஒரு குற்ற உணர்ச்சி முள் முள்ளாக உறுத்தியது.

'அடடா... எம்புட்டு பிரியமா இருந்துருக்கான். ஏங்கித் தவிச்சிருக்கான். நாங்கூட.... பாதுகாப்புக்காகத் தானே வீரபாண்டியை எதிர்பார்த்து தவிச்சேன்?' அவனுள் குத்திக் குடைகிற நினைவு முட்கள்.

வீரபாண்டியின் முரட்டுத் தனம், கட்டுக்கடங்காத சேட்டைத் தனம்... இவற்றுக்கிடையில் பலாச்சுளையாக ஓர் அன்புநதி, அவனுக்குள் பெருக்கெடுத்தோடுகிறதே...

செந்தட்டியின் கண்ணிமை ரோமத்தில் ஈரச்சுமை, மனநெகிழ்வின் முகம். பேசத் தோன்றவில்லை. பேச ஆரம்பித்தால், அழுகை வெடித்துவிடும். மனசின் உணர்வுகளின் முட்டல். நாசி நுனி துடிக்கிறது. உதடுகளின் நடுக்கம். அடி உதட்டை கடித்து... உணர்வுகளை விழுங்குகிற செந்தட்டி.

''நல்ல வேளைடா... ஆடு மேய்க்குறதுலே நீயே எனக்கு வாத்தியாரா அமைஞ்சுட்டே. வசதியாப் போச்சு... இல்லியா?'' கேலியாகச் சிரிக்கிற வீரபாண்டி.

''போடா... போ... வாத்தியாராம்... வாத்தியாரு. ஆடு மேய்ச்சுச் சீரழியுறதுக்கு, வாத்தியாரு வேற வேணு மாக்கும்?''

கசந்த உணர்ச்சியும், விரக்தியுமாக உதட்டைப் பிதுக்குகிற செந்தட்டி. அவனைப் பார்த்து... குதூகலமாக கைதட்டிச் சிரிக்கிற வீரபாண்டி.

எங்கோ வெறிக்கிற செந்தட்டி. சோகத்தில் மூழ்குகிற நினைவுகள். தொலைந்து போன கனவுகளை எண்ணுகிற மனசின் வலி. வருத்தமாக 'உச்சூ' கொட்டுகிற பரிதாபம்.

''என்னடா... ஒரு மாதிரியாயிட்டே?''

''ப்ளஸ் 2 முடிக்கணும். டீச்சர் ட்ரெயினிங் முடிக் கணும். எஸ்.சி. கோட்டாவுலே வாத்தியாராகணும். நம்மை மாதிரிப்பட்ட ஏழை எளியதுகளுக்கு நல்லபடியா சொல் லிக்குடுத்து, கை தூக்கி விடணும்னெல்லாம் நெனைச்சுருந் தேண்டா. அதுலே மண்ணள்ளிப் போட்டுருச்சு... அய்யா உசுரை புடுங்கின கரண்டு''

செந்தட்டியின் கம்மிய குரலில் வழிகிற அவனது உணர்வுகள். சிதைந்து உருக்குலைந்த கனவுகள்.

''ஏண்டா... கண்ணைக் கசக்குதே...? நானும் தான்... படித்து முடிச்சுட்டு பட்டாளத்துக்குப் போகணும். இல்லே, போலீசாகணும்னு திட்டம் போட்டிருந்தேன். போச்சு... என்ன செய்ய? வுட்ரா... வர்றதை அனுபவிப்போம்...''

இதுதான் வீரபாண்டி. எதையும் விளையாட் டாக எடுத்துக் கொள்கிற மனம். பொறுப்பையும்,

வருத்தத்தையும் சுமக்காத மனம். அதனாலேயே பயமில் லாத சேட்டைகள். வம்புகள் செய்கிற திணவு.

செந்தட்டி குனிந்து ரெண்டு கல்லை பொறுக்கினான். கரையேற முயல்கிற கொம்புக் கிடாயையும் வெள்ளைக் காது குட்டியையும் நோக்கி 'விர்'ரென்று பறக்கிற கற்கள். கல்லின் இரைச்சலுக்குப் பயந்து உள்ளிறங்கி ஒடுங்கு கின்றன, மற்ற ஆடுகளும்.

வீரபாண்டிக்கு ஒரே ஆச்சரியம். அவனுள் பிரமிப்பான எண்ணம்.

''எப்படிடா... ஒன்னாலே முடியுது?''

''என்னது?''

''இம்புட்டு வருத்தமா பேசிக்கிட்டிருக்கிறப்பவும்... தப்பிப்போகிற குட்டிகளை எப்புடிடா கவனிச்சுட்டே?''

''அதாண்டா... தொழிலு. அடிவாங்குன பயம். குட்டி தப்பி மேய்ஞ்சா, அறை வாங்குறது நாந்தானே? அடியும், வசவும் வாங்குன பயத்திலேயே... மனசு, முழிப்பாயிரு துல்லே?''

''இனிமே... பயப்படாதேடா. நா இருக்கேன்லே? எவனாச்சும் ஒன்னை அடிக்க முடியுமாடா? விட்டுரு வேணடா? நொறுக்கிரு வேண்டா...''

செந்தட்டிக்குள் ராமகிட்ணன் முகம். கறுத்த மீசையின் அச்சுறுத்தல். அடித்த அடிகளின் வலி, இப்போதும் நெஞ்சுக்குள் அதிர்கிறது.

'சின்னச்சாதி நாயே...' என்ற சாட்டையடிச் சொல், இன்னும் உயிரைச் சுழற்றி சுடுகிறது.

செந்தட்டிக்கு இப்போது தோன்றுகிறது.

வீரபாண்டி தொடர்ந்து படிச்சிருக்கணும்னு சொன்னேனே... அது நிஜமா? ஆடு மேய்க்க வந்து, தனக்கு பாது காப்பா இருக்குறது நல்லதுன்னு நெனைக்குறேனே... இது நிஜமா? எது நிஜம்? நட்பு அப்படியும், சுயநலம் இப்படியுமா நெனைக்க வைக்குதா?, செந்தட்டிக்குள் குறுக்கும் மறுக்குமாக ஓடுகிற நினைவுகள். யோசனைத் தீவிரம். உள்மனப் பயக் குழப்பம்.



# 10

வீரபாண்டியன் ஆடுகளையும், குட்டிகளையும் பிரித்து, சத்தம் போட்டு ஒதுக்கி... ஊருக்குள் அனுப்பி விட்டு... தனது ஆட்டுக் குட்டிகளை பத்திக் கொண்டு சேரிக்குள் நுழைகிறான் செந்தட்டி.

ஊருக்குள் போகிற வீரபாண்டி கையை உயர்த்தி, சத்தம் கொடுக்கிறான். ''ஏலேய்... செந்தட்டி, தொழுவுலே அடைச்சுட்டு களத்துக்கு வந்துரு...'' ஓங்கிக் கத்துகிற அவனைப் போலவே, பதிலுக்கு கூப்பாடு போடுகிற செந்தட்டி.

''எதுக்குடா?''

''வாடான்னா... வாடா...''

''சரிடா...''

ஆடுகள் எழுப்புகிற புழுதியை தங்கநிற மாக்குகிறது, அந்தி வெயில். தொழுவத்தின் படல் கதவைத் திறக்கிறான். ஆடுகளையும், குட்டிகளையும் அடைக்கிறான். தொழுவம் சுத்தமாக இருக்கிறது.

''சத சத'' வென்று சாணியும், புழுக்கைகளும், மூத்திரச் சகதியுமாகக் கிடந்த தரையை அம்மா... பருத்திமாரால் வழித்து அள்ளியிருக்கிறாள். சுரண்டியாலும் மூத்திரச் சகதியை கொத்தியள்ளியிருக்கிறாள். கழுவிக் கவிழ்த்திய கும்பாவைப் போல, சுத்தமாக இருந்தது.

''என்னடா... செந்தட்டி, வந்துட்டீயா?''

''ஆமம்மா...''

''இங்க வாடா...''

''என்ன...''

''தீம்பண்டம் வைச்சிருக்கேன்பா...''

உள்ளே போனான். தூக்குச் சட்டியையும், பாட்டிலையும் அம்மாவிடம் தந்தான். கம்பை மூலையில் சாத்தினான். சொப்புத் தண்ணீரை 'மடக்கு மடக்' கென்று குடித்தான்.

''என்னம்மா... வைச்சிருக்கே...?''

''இந்தா... கண்ணு''

ஓமப்பொடி முறுக்குகள். காய்ந்து கிடந்த வாய். மதியம் மஞ்சணத்தி மர நிழலில் சாப்பிட்ட பிறகு... வாயில் எதுவும் போடவில்லை. ஆவலோடு வாங்கினான். பசித்த வெள்ளாடாக, நொறுக்கி அமுக்கினான்.

புறப்படுகிற அவசரத்திலிருக்கிற மகன்.

''எங்கேடா...?''

''வீரபாண்டிதான் வரச் சொன்னான்ம்மா. போய்ட்டு வாரேன்''

பள்ளிச் சிறுவன். பதிமூன்று வயசுப் பாலகன். தெருவில் இறங்கியதும், ஓட்டம் பிடித்தான். காற்றினால் முதுகுச் சட்டை உப்புகிறது. பாராசூட் போல புடைக்கிற சுகம். அவனுக்கு அது ஒரு விளையாட்டு. பள்ளியை தவற விட்டாலும், விளையாட்டு மனசை இழக்காத வயசு. சிறகைக் கிள்ளி விட்டு விட்டாலும்... தவ்வித் தவ்விக் குதிக்கிற மைனா மனசு.

ஓடுகிறபோதே... குதித்து குதித்து ஓடுகிற ஒரு விளை யாட்டு. குத்துரலைத் தாண்டிக் குதிக்கிற சாகசம். பன்றி யைத் தாண்டுகிற தவ்வல். சாக்கடை வாய்க்கால் நுனியிலேயே நுணுக்கி ஓடுகிற ஓட்டம்.

களத்துக்கு வந்து சேர்ந்தான். சேரிக்கும், ஊருக்கும் நடுவில்... சற்று விலகி இருக்கிற இடம். சிமிண்டுக் களம். களத்து ஓரத்தில் ஒரு வேம்பு. அதன் அடியில் வீரபாண்டி.

"என்னத்துக்குடா... வரச் சொன்னே?"

கைலி மடிப்பில் கிடந்த பருத்தியை யள்ளி உருட்டி, சிமிண்டில் வைக்கிற வீரபாண்டி டவுசர் பையில் இரண் டிலும் புடைப்பாக திணிக்கப்பட்டிருந்த பருத்தியை உருவி உருவி வைத்தான்.

"ஏதுரா... இது?"

"ஆத்துக்கு வடக்கேயிருக்குற புஞ்சையிலே கைவைச் சேன்டா..."

"களவுங்குறது தப்பில்லையாடா...?" பயத்தில் திகைக்கிற செந்தட்டி. ஆடுகள் ரெண்டு வாய் கடித்ததிற்கே இவனுக்கு விழுந்த அடிகள். காய்ந்த தலைமுடியை பற்றி இழுத்த கொடுமை. 'சப், சப்'பென்று தீப்பறக்க அறைந்த பயங்கரம்.

நினைத்தாலே ஒண்ணுக்கு வருகிறது.

பயத்தில் நனைந்த பச்சைக்குஞ்சாக 'விலுக், விலுக்' கென்று நடுங்கி விழிக்கிற செந்தட்டியைப் பார்த்து உல்லாச மாகச் சிரிக்கிற வீரபாண்டி.

''களவுங்குறது எப்பவுமே பாவமில்லேடா. களவாண்டு போய், சேத்துவைச் சாத்தான் குத்தம். தின்னுதீர்த்தா, பாவம் போயிரும். திங்குறதுக்காக... கொல்றது கூட குத்த மில்லேடா...''

''புதுப்புது தத்துவம் சொல்றீயே... கில்லாடி டா''

''சரி சரி... போய் பருத்தியெடுத்துட்டுப் போய்... கரிகாலன் கடையிலே கருப்பட்டிச் சேவும், சீனிக்கிழங்கும் வாங்கிட்டு வாடா...''

''பொழுதடைஞ்சிருச்சுடா... சீனிக்கிழங்கு ஊசிப் போய் இருக்கும்லே?''

''ஆமா... கருப்பட்டிச் சேவும், ஓலைச்சீவலும் வாங்கிட்டு வாடா...''

''ஆட்டும்...''

செந்தட்டி போய் வருவதற்குள்... 'கரு கரு'வென்று இருட்டிக் கொண்டு வந்தது. சாயங்கால நேரம் ஓடைக்கு வருகிற ஒன்றிரண்டு கிழடு கட்டைகள்... வீரபாண்டியிடம் கேட்கின்றனர்.

''என்னடா... இங்கனே இருக்கே...''

''சும்மாதான்''

''ஏலேய்... சேட்டைப் பண்ணிட்டு, படிப்பைத் தொலைச் சுட்டேடா. ஆடுமேய்க்க காடுகரையிலே திரிஞ்சா... ஏகப்பட்ட சேட்டைக செய்யலாம். அப்படி எதுவும் செய்ஞ்சு.. உங்க அப்பனுக்கு தலைகுனிவை ஏற்படுத்திராதேடா...''

''களைவெட்டுதுக்கு புஞ்சைக்குவர்ற கொமரிப் புள்ளைகளை... பம்ப்ஷெட்டுக்கு வரச் சொல்லி... பாடாய் படுத்துறது... ரொம்ப ஒழுக்கமோ? தலையிலே கிரீடம் வைப்பாகளோ...? வெக்கக்கேடு இல்லியோ?''

அம்புட்டுத்தான். அந்தக் கிழவருக்கு மூஞ்சியில் செருப்பால் அடித்த மாதிரியிருந்தது. ''ச்சீ... நாயே'' என்று காறித் துப்பிய மாதிரி யிருந்தது. சுள்ளென்று கோபத்தில் விறைத்தார். இவனை முறைத்தார். இவனும் பயமில்லாமல், நிமிர்ந்து முறைத்தான் 'போடா... எங்கால் தூசியே... என்கிற மாதிரி எகத்தாளமும், ஏளனமுமாய் பார்க்கிற இவன், மகா அலட்சியம்.

அவருக்கு அவமானமாகிப் போய்விட்டது. குட்டி நாயிடம் விரட்டுப் பட்ட இழிவு. அசிங்கம். ஆனாலும், ஒன்றும் செய்ய முடியாது. உண்மையைச் சொல்கிறான்.

'போடா... போ... விலாவுலே வெடிச்ச பயடா, நீ. வௌங்க மாட்டே... நீ பேசுற திமிரும், செய்யுற சேட்டை களும்... ஒன்னை பாழுங்குழியிலே தள்ளும்டா...''

''போய்யா... நீரு ஒண்ணும் என்னை குழியிலேயிருந்து காப்பாத்த வேண்டாம். போய்யா...''

''நாசமாய்ப் போற நாய்... புள்ளையாகவா, பொறந் துருக்கு? பிசாசா பொறந்துருக்கான். சீரழிவான்...''

இயலாக்கோபமாய், சாபமும், முணுமுணுப்புமாக போகிற, அந்த ஆளையே முறைத்துப் பார்க்கிற வீரபாண்டி, பரிகாசச் சிரிப்பு பீறிட்டு வருகிறது. பருத்தியாக வெடித்து உதட்டில் மலர்கிற புன்னகை.

செந்தட்டி வந்து விட்டான். துண்டின் ஒரு நுனியில் பொட்டலமாகக் க்ட்டிக் கொண்டு வந்திருக்கான். உருண்டைப் பொட்டலம் நெஞ்சில் உருண்டது.

வீரபாண்டிக்கு ஆவல். எச்சில் ஊசியது. நெஞ்சும், வாயும் கிடந்து பறந்தது.

கரிகாலன் கடையில்தான் தின்பண்டம் நன்றாக யிருக்கும். மாதாங்கோவில்பட்டி சேவு இருக்கும். நூல் மாதிரி பொடிக்கண்சேவாக இருக்கும். ருசியாக இருக்கும். தனி வாசம்.

''கொண்டா...டா... இப்புடி, உக்காரு...''

துண்டு முடிச்சை அவிழ்க்கின்ற பரபரப்பு, வீரபாண் டிக்குள் திண்பண்ட ஆவல். நமைச்சல் எடுக்கிற நாக்கு. வயிற்றில் பிடுங்கிற பசி. மனசில் தின்பண்ட ருசி. சிறு வயசுக்குரிய ஆர்வப் பரபரப்பு. வாய்க்கு ருசியானதை வாங்கி மொக்கி விட்டு... விளையாடித் திரிகிற வயசு.

கருப்பட்டிச் சேவு ரொம்பத் தித்திப்பு. வித்தியாசமான வாசம். கடைவாய்ப் பல்லில் மெல்லுகிற போதே... நெஞ்சுக்குள் இறங்குகிற இனிமை.

''தின்னுடா... எடுத்துக்கோடா...''

ரெண்டு பேரும், காணாத பச்சையை கண்ட ஆட்டுக் குட்டியாகப் பாய்ந்தனர். ஆவல் ஆவலாக மேய்ந்தனர். 'நறுக், புறுக்'கென்று சத்தமாய் திண்பதில் ஒரு விளை யாட்டு ருசி. துள்ளித்திரிகிற சுதந்திரத்தை அனுபவிக்கிற ருசி.

வீரபாண்டி பனியனுக்குள்ளிருந்து பீடியை எடுத்தான். தீக்குச்சி தீப்பெட்டியின் சைடு.

''வேணுமாடா?''

''ஒனக்கும் வேணாம்டா... இது'' பதறிப் பதைக்கிற செந்தட்டி.

''போடா...'' பற்ற வைக்கிற வீரபாண்டி.



# 11

**ப**ள்ளி இல்லை. வகுப்பு இல்லை. அதிகாரத்திற்கு பணிகிற பிள்ளைகள் இல்லை. கேலி கிண்டல் பண்ணி, நக்கல் செய்ய வாத்தியார்கள் இல்லை. கடை இல்லை. நினைத்த நேரம் திண்பண்டம் வாங்கித் தின்ன வாய்ப் பில்லை.

ஏகப்பட்ட 'இல்லை'கள். முடிவே இல்லாத 'இல்லை'கள். மனசின் சுவாரஸ்யங்களையும், உல்லாச இனிமை களையும் இல்லையாக்குகிற கொடிய 'இல்லை'கள். ஏக்க வேதனையிலும், சலிப்புணர்ச்சியிலும், இவனைப் போட்டுப் புதைக்கிற நரக 'இல்லை'கள்.

வீரபாண்டிக்கு தாங்கவே முடியாத சலிப்புச் சுமை. கம்பை ஒருச்சாயலாக ஊன்றிக்கொண்டு, அதன் மேல் உடம்பைச் சாய்த்துக் கொண்டு, வெயிலை வெறித்துக் கொண்டு... எம்புட்டு நேரம் தான் நிற்பது?

செந்தட்டியோடு ஊர்புரணி, உலகப் புரணி என்று எவ்வளவு தான் பேசுவது? பேசப் பேச... வார்த்தைகளே வற்றிப் போய் விட்ட மாதிரியோர் மனச்சூன்யம்.

சின்னஞ்சிறு மஞ்சணத்தி மரக்குட்டிகளின் மேல் முன்னங்கால் இரண்டையும் தூக்கிப் போட்டுக்கொண்டு, நின்றவாக்கில் ஆற அமர கொழுந்துகளைக் கடிக்கிற கிடாய்கள். கரடுகளை நக்குகிற ஆடுகள். காய்ந்த கோரைப் புல்லையும் 'பார்ச், பார்ச்' சென்று மேய்கிற குட்டிகள்.

காடு, ஆறு என்கிற வறண்ட பாலைவனம். தூரம் தூரமாய் நீண்டு அகல்கிற காடு. மனித மக்கள் வெகு தூரத்தில். ஊரும், அதோ... ரொம்பத் தள்ளி. காட்டின் தனிமையும், வெறுமையும் ஒரு மௌனச் சுமையாக அழுத்தி... சலிப்பில் நெஞ்சை உலரவைத்து, பொடிப் பொடியாக்குகிறது. பொடிப்பொடியாக காய்ந்து உதிர்கிற நெஞ்சு வறட்சியிலிருந்து... வக்கிரம், தேள் கொடுக்காக வெளிவருகிறது. மனிதமனக் கட்டுப்பாடு தகர்கிறது.

சத்தம் போட்டு... கெட்ட வார்த்தைகளில் கத்துகிறான். வார்த்தையிலும், ஆடையாலும் மறைக்கப்படுகிற மனித உறுப்புகளை கொச்சை கொச்சையான நிர்வாணமாக உச்சரிக்கிறான்.

'முகத்தைக் காட்டு... அழகைப் பார்க்கலாமா' போன்ற பாட்டு வரிகளை கெட்ட வார்த்தைகளாக மாற்றி... கூச்சநாச்சமற்ற அசிங்கத்துடன் கத்திப் பாடுகிறான்.

செந்தட்டிக்குப் பதறி வருகிறது. வெறுப்பாகவும் இருக்கிறது.

''டேய்... வீரபாண்டி, நாம சின்னப் பயகடா. இப்புடி யெல்லாம் அசிங்கம், அசிங்கமாய் பாடலாமாடா? ச்சேய்''

''ச்சேய், அசிங்கம்'னு அய்யாவும், அம்மாவும் விலகி யிருந்துருந்தா... நீயும், நானும் வந்துருக்க முடியாதுடா...''

''நாமமட்டுமில்லேடா.. நாம பேசுற பேச்சும்... துணிமணி உடுத்தியிருக்கணும்டா...''

''நாங்கேக்கேண்டா... நமக்கே துணிமணி என்ன செய்ய?''

''என்ன வீரபாண்டி, துணியில்லாம மனுசன் இருக்க முடியுமா?''

''இருந்தா... என்ன? செத்தா போவாக?''

சட்டென்று கைலியை அவிழ்த்து வேலிமரம் மேல் உதறிய வீரபாண்டி. டவுசரையும் கழற்றிப் போட்டான்.

மூஞ்சியில் காறித்துப்பின மாதிரியிருக்கிறது செந்தட்டிக்கு. அழுகையும், அவமானமும் பிடுங்கித் தின்கிறது. ''ச்சேய்...'' என்று வேறு பக்கம் திரும்பிக் கொள்கிற செந்தட்டி. 'இந்தப் பயலுக்கு கிறுக்கு புடிச்சிருச்சா...?'

அம்மணமாக வனத்திற்குள் அங்கும் இங்குமாக ஓடுகிற வீரபாண்டி. மேற்பல்லை இளித்துக் கொண்டு, காமக் கனைப்புடன், ஆட்டைத் துரத்துகிற கொம்புக் கிடாயை இவன் விரட்டுகிறான்.

வேண்டுமென்றே 'தங்கு, தங்கென்று குதிக்கிற ஆபாசம். கூசித் தலை குனிகிற செந்தட்டியைப் பார்த்து நக்கல் பண்ணி சிரித்துக் கொண்டே... குதித்து கும்மாளம் போட்டு விட்டு... டவுசரை எடுத்து மாட்டிக் கொள்கிறான். கைலியை தாறுமாறாக இடுப்பில் சுற்றிக் கொள்கிறான்.

''சாப்புடுவமாடா?''

''ம்''

ஆற்றங்கரைக்கு முதுகைக் காட்டிக் கொண்டு ஒரு காட்டுக்கோவில். கோவிலுக்குப் பின்புறம் ஏகப்பட்ட வேப்பமரங்கள். புளிய மரங்கள். அந்த நிழலுக்குப் போயினர். இருவரும் தூக்குச் சட்டியைத் திறந்தனர். தண்ணீர் பாட்டிலை திறந்து கொண்டனர்.

ஊறுகாய் இருந்தது. கத்தரிக்காய் வற்றல் இருந்தன. பழைய சோற்றுப் பருக்கைகளை நீச்சுத் தண்ணீருக்குள் பொதிந்திருந்தன.

பிசைந்தனர். நொறுங்கப் பிசைந்து கொண்டு... பேசிக் கொண்டே சாப்பிட்டனர். நாலைந்து குட்டிகள் ஆற்றங் கரைப் புஞ்சைக்குள் கள்ளப் பார்வையாக பார்த்துக் கொண்டு நுழைவதை இவர்கள் பார்க்கவில்லை. முள் அடைப்பும், தகரக் கதவும் போட்டிருந்த பரந்த புஞ்சை யிலிருந்து விலகியிருந்த துண்டுப் புஞ்சை.

பருத்திக் கொழை, புஞ்சையிலேயே இந்தத் துண்டு நிலம் துருத்திக் கொண்டிருந்தது. ஒட்டி வைத்த கட்டி போல ஒட்டாமலிருந்தது. ஆற்று நிலத்தை ஆக்ரமித்து மேடேற்றி... புஞ்சையாகச் சேர்த்த இடம்... அது புறம் போக்கு சுயபோக்காகியிருக்கிறது.

அதில் தான் பருத்தி விளைந்திருக்கிறது. கொழை மோதிய நல்ல வெள்ளாமை. அகத்திக் கொழையும், ஆமணக்கு செடிகளும் இருந்தன.

கஞ்சியாகக் குடித்து காய்ந்தவன், கல்யாண விருந்தைச் சாப்பிட்ட மாதிரி... பறந்து பறந்து... கொழைகளைக் கடித்தன. 'லபக், லபக்'கென்று பறப்பெடுத்து கவ்வின, ஆடுகள்.

''ஏலேய்... எவண்டா... ஆடு மேய்க்குறது? எந்தச் சிறுக்கி மகன்டா... தேவுடியா மவனே...''

ராஜகோபாலின் முரட்டுக் குரல். பெரிய மஞ்சணத்திக் கட்டையுடன்... வெறிவேகமாக விரட்டுகிற ராஜகோபால். பருத்திச் செடிக்குள் குதித்து குதித்து ஓடி வருகிற அவரது வேகம். அவருக்கு முன்பாக -

எறியப்பட்ட கட்டை பறந்து வந்தது. ரெண்டு கிடாய்கள் மேல் 'சொடே'ரென்று விழுந்தது.

''ம்ம்ம்மேய்க்க்...'' என்று வலியோடு கதறுகிற கிடாய்கள்.

ரெண்டு கிடாய்கள் பின்னங்காலை ஊன்றாமல், கெந்தி கெந்தி வந்தன. கால் ஒடிந்திருக்குமோ?

செந்தட்டிக்குள் பயப்படபடப்பு. தலைமுடியைப் பற்றியள்ளிய ராமகிருட்ணன். 'சின்னச்சாதி நாயே' என்ற வசவுகள். பட்ட அடிகளின் தீச்சுடல்.

இதோ... நாலுகுட்டிகள் பருத்தி வெள்ளாமைக்குள் மேய்ந்து விட்டன. புஞ்சைக்காரரும் வசவுகளும், கோபமுமாய் வருகிற வெறி.

மறுபடியும் பயங்கரம். அவமானம். அடிகள்...

செந்தட்டிக்குள் வியர்த்துக் கொட்டுகிறது. பயத்தில் மனச் சிறகின் மாரடிப்பு. பிடிபட்ட எலியாக "விலுக், விலுக்"கென்று விழிக்கிறான். அச்சமும், திகைப்புமாக வீரபாண்டியை பார்க்கிறான்.

கண்ணாலேயே... "பொறு... பேசமா இரு... நா பாத்துக்கிடுதேன்" என்று தைர்யம் கூறுகிற வீரபாண்டி.

அவசரமாகச் சாப்பிட்டு முடித்து விட்டு... சாப்பிட்ட கையை கைலியில் துடைத்துக் கொண்டு... பரபரப்பாக ஓடிவந்தான். அந்தப் புஞ்சையை நோக்கி...

புஞ்சையை தாண்டி வருகிற நாலு ஆடுகளில் ரெண்டு கிடாய்கள் காலை நொண்டிக் கொண்டு வருகின்றன. அதைப் பார்த்தவுடன் வீரபாண்டிக்கு ரத்தம் கொதித்தது.

"எந்தத் தாயோ... டா... எங்கிடாய்க காலை ஒடிச்சது? ரெண்டாயிர ரூபாய் அபராதம் குடுக்காம தப்பிக்க முடியாது... காலை ஒடிச்ச நாய், யார்டா?"

கோபக்கத்தலாக முன்னேறுகிற வீரபாண்டியை புஞ்சைக் கரையில் நிற்கிற ராஜகோபால், "ஏண்டா...

வெள்ளாமையிலே ஆடுகளை விட்டது. நீதானடா...?'' என்று எகிறுகிறார்.

கிட்டத்தில் வரவர.. வீரபாண்டி என்று இனம் புரிகிறது. ரெண்டாயிரம் அபராதம் வாங்க வருகிறானே என்று பதறிப் பதைக்கிற ராஜகோபால். வீரபாண்டியையும், அவனது உறவுக்காரர்களையும், அவர்களது கை வலிமை யையும் எண்ணி உள்ளூரப் பதைக்கிற அவர், சமாளிக்க யோசிக்கிறார். மானம் போகாமல்... தப்பிக்கணுமே என்று யோசனை.

கெந்திக் கெந்திப் போகிற கிடாய்களைப் பார்த்து, நிஜமாகவே பரிதாப்படுகிற ராஜகோபால்.

தோளில் கிடந்த துண்டை வீராவேசமாக தலையில் கட்டிக் கொண்டு வருகிற வீரபாண்டி, புலிப்பாய்ச்சல்.

''யோவ்... எதுக்குய்யா... கிடாய்க் காலை ஒடிச்சே?''

''ஏலேய்... நீ சின்னப்பய. மரியாதையா பேசு...''

''ஏய்... ஒனக்கெல்லாம் என்னய்யா மரியாதை?'' வாயில்லாச் சீவனை, காலை முறிக்குற நீயெல்லாம் ஒரு மனுசனா?''

''எதுக்குல வெள்ளாமையிலே விட்டே? வெள்ளா மையிலே குட்டிக மேய்ஞ்சா... பாத்துக்கிட்டு முத்தமா குடுப்பாக?''

''இங்க எதுக்கு நீ வெள்ளாமை செய்ஞ்சே? ஆத்துப் பொறம்போக்கை ஆக்ரமிச்சு... வளைச்சுக்கிட்டீன்னா... ஆடுகுட்டிக எங்க போய் மேயுறது? ஒந் தலையிலா?'' நீள்கிற வாக்குவாத்தில் வீரபாண்டி கை ஓங்கிக் கொண்டு போக... ராஜகோபால் குரல் தணிந்தது. பம்மிப் பதுங்குகிறது.

''வாய்யா... ஊர்க்கூட்டத்துக்கு'' என்று அதட்டுகிற வீரபாண்டி. ராஜகோபால் கெஞ்சத் தொடங்கினார்.

ரெண்டாயிரம் அபராதம் தருவதற்கு சம்மதிப்பதைத் தவிர வேறு வழியில்லை.

செந்தட்டி ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். பற்றியிழுத்த தலைமுடி, செவிட்டில் விழுந்த அடிகள். 'சின்னச் சாதி நாயே' என்ற வசவுகள். நியாயம் கேட்கப் போன அம்மாவுக்கும் மிரட்டல்.

அதே தப்பு. அதே குற்றம். வீரபாண்டிக்கு ராஜகோபால் கெஞ்சிக் கூத்தாடி அபராதம் கட்டுகிற தீர்ப்பு.

வல்லான் வகுத்ததே வாய்க்காலா? வலுத்தவன் வைத்ததே சட்டமா? நீதியில்லையா? சகலருக்கும் பொதுவான நியாயம் இல்லையா?

நாலைந்து நாள் ஆயிற்று. அந்தத் துண்டு நில வெள்ளாமை பூராவும் நாசக்காடு. துரட்டியால் வெட்டிச் சரிக்கப் பட்ட பருத்திச் செடிகள். முழுசாக வெட்டப்பட்டு, அலங் கோலமாகக் கிடக்கிற அகத்திச் செடிகள். அழிக்கப்பட்ட ஆமணக்குச் செடிகள்.

''யார்டா... இப்புடிச் செய்ஞ்சது?'' திகிலோடு கேட்கிற செந்தட்டி.

பிரமித்துப் போகிற செந்தட்டி, உள்ளுக்குள் மிரண்டான்.

இவன் நமக்கு ரட்சகனா... ராட்சஸனா என்று புரியாமல் தவிக்கிறான்.



## 12

ஊர் மந்தையில் அவரவர் ஆடுகளை இனம் பிரித்தனர். ''டேய் வீரபாண்டி, ஒட்டைக் காதை அங்குட்டு மடக்கு''

''ஏலேய் செந்தட்டி, காது வெள்ளையை சப்புன்னு அறைஞ்சு, தள்ளி நிறுத்து''

''அந்த மூக்குச் சளியை அங்குட்டு வெரட்டு''

இங்கு பத்தினால் அந்தப் பக்கம், அங்கு பத்தினால் இந்தப் பக்கம் என்று ஆடுகள் மாய்மாலம் பண்ணிற்று. ஓட்டம் காட்டின. ஓரிடத்தில் நில்லாமல் போக்கு காட்டி... பெரிய அலப்பரை பண்ணிற்று.

ரொம்பச் சிரமப்பட்டனர். வீரபாண்டிக்குக் கோபம் கோபமாய் வந்தது. ஆடுகளையும், குட்டிகளையும் கெட்ட வார்த்தைகளில் திட்டித் திட்டி கத்தினான். காடு என்கிற நினைப்பு. காட்டுக் கத்தலாக ரெண்டு பேரும் கத்தினர். ''போடா... வாடா... ஏலேய்'' என்று ரெண்டுபேரும் கூவல் காடு போட...

மந்தையிலிருந்த ஊர்க்காரர்களுக்கு முகம் கறுத்தது. எரிச்சலும் ஆத்திரமுமாய் கடுகடுத்தனர். குமுறலும் வெறுப்புமாய் முணுமுணுப்புகள்.

''இவனும் 'ஏலேய்'ங்குறான். அவனும் 'ஏலேய்'ங்குறான்?''

''ம்...''

''சின்னச்சாதி, பெரியசாதின்னு வித்தியாசமில்லியாக்கும்?''

''ஒரே வகுப்புலே ஒண்ணாப் படிச்சவங்க. ஒண்ணாவே ஆட்டுலே திரியுறவங்க. மனசு ஒண்ணாயிருச்சு''

''மனசு ஒண்ணானா... சாதி இல்லாமப் போயிருமா? ரெண்டு பேரும் 'சம்பந்தம்' பண்ணிக்கிடுவாங்களா?''

''சின்னவங்க... கள்ளமில்லாம பழகுறாங்க''

''பெரியவங்களுக்கு அறிவு எங்க போச்சு? சின்னவங்களுக்கு புத்தி சொல்ல வேண்டாமா? யாருகிட்டே, யாரு, எப்படிப் பழகுறதுன்னு சுட்டிக்காட்டணும்லே?''

ஆடுகுட்டிகளை அதட்டி இனம் பிரிக்கிற இச்சிலாத்தி பிடித்த குழப்பத்துக்கு இடையிலும்... ஊர்க்காரர்கள் பேசிக் கொண்ட பேச்சுகளின் துண்டு துக்காணி, செந்தட்டி காதில் விழுந்தது. நெருஞ்சி முள்ளாக மனசுக்குள் குத்தி உறுத்தின. காந்தலான உறுத்தல். சமுதாய அடுக்குகளின் ஏற்ற வித்தியாசங்களை சுட்டிக் காட்டுகிற முள்.

''நீ இன்ன சாதி... உன் சாதியின் இடம் இது'' என்று சின்னஞ் சிறுவனின் வெள்ளை மனசில் நச்சு வண்ணம் ஏற்றுகிற சமூகக் குரூரம். சாதியக் குணம்.

'எல்லா மனுசரும் ஒண்ணுதானே' என்கிற மழலை மனசில், சமூகத்தின் மேடு பள்ளப்புண்கள் வடிக்கிற சீழ் நாற்றம். 'எல்லா மனுசரும் ஒன்றல்ல' என்கிற கசப்பான யதார்த்தத்தை கற்றுத் தருகிற சமுதாய வாழ்க்கை.

அக உலகத் தூய்மையை அழுக்காக்கி... விஷமும், விஷமமுமாய் ஆக்குகிற புற உலகக் கோணல். மனுச மனசை வதக்கி வார்த்து, கோணல் குறுகலாக

வடிவமாக்குகிற சமூகம். மனித உறவை மிருக உறவாக நிறம் மாற்றுகிற பயங்கரம்.

செந்தட்டிக்குள் தீயின் வெக்கையாக நினைவுகள். மூளையில் உரசிய புதிய உண்மைகள்.

''சின்னச் சாதி நாயே...'' என்று ராமகிட்ணன் ஆங்காரமாய் திட்டிய வசவுச் சொல்லின் சூட்சுமமும், ஆணிவேரும் இன்றுதான், தட்டுப்படுகிறது. உயிரின் ஆழத்தில் சுடுகிறது.

பணவசதி இல்லாத வீரபாண்டியின் சொந்தக்காரர்களைக் கண்டு... சார்லஸ் வாத்தியாரும் ராஜகோபாலும் அரள்வதின் காரணம்... இப்பத்தான் மெள்ள மெள்ளப் புரிகிறது.

தன்னை அடிக்கிற ராமகிட்ணன். வீரபாண்டிக்கு வளைகிற ராஜகோபால். அடடா... இதுதான் சூட்சுமமா?

செந்தட்டிக்கு சூழலே மனித அநீதியாகத் தென்படுகிறது. வெறுப்பும், கசப்புமாக காறித்துப்பத் தோன்றுகிறது.

''என்னடா... எங்கேயும் போகணுமா வேண்டாமா?'' செந்தட்டி கேட்கிற போது, குரலில் ஒரு நெருடல். ஓர் இடறல்.

''போகணும்லே? இங்க வந்துருடா. வந்தப்புறம் 'எங்க'ன்னு சொல்றேன்டா''

வீரபாண்டியின் பிசிறடிக்காத பழைய குரல். வெள்ளைக் குரல்.

கொழை ஒடிக்கப் போகணும். காலையில் பத்து மணிக்கு ஆடுகளை மேய்ச்சலுக்கு கிளப்புகிற வரைக்கும்... இரைவேணும். அதுக்கான கொழைவேணும். எவன் புஞ்சையிலாவது களவாங்கணும். பாம்பு பல்லிக்குப் பயப்படாம, முள்ளுமுடலுக்கு நடுங்காம... இருட்டுக்குள்ளே இருட்டா

உலவணும். வாயில்லாச்சீவன்கள் கொலை பட்டினியாகக் கிடக்கக் கூடாதே என்கிற உயிர்க் கருணையால்... உயிரைப் பொருட்படுத்தாத... களவு, கருணைக்கான களவு.

வீடு போய்ச் சேர்கிற செந்தட்டி, தொழுவத்துக்குள் ஆடுகளை அடைத்தான். கயிறுகளில் கட்டப்பட்ட பழைய கொழைகள், வாடல். பரணில் கிடந்த தூக்கிப் போடப் பட்டிருந்த கொழைத்தூக்குகளை - இறக்கி விட்டான்.

'அய் ராசா' என்று கொண்டாடுகிற கொண்டிவேலம்மா. 'சாப்புட்டீயா, சாப்புடுதீயா' என்று விழுந்து விழுந்து கொஞ்சுகிற அம்மா. காட்டு வானந்திரத்தில் பொழுதெல்லாம் காய்ந்து உலர்ந்து வருகிற பச்சை மண் என்று கரைந்துருகுகிற தாய் மனசு.

எதற்கும் சலனமில்லாமல் கிடக்கிற செந்தட்டி. இறுகி உறைந்து போயிருக்கிற அவனது வெலவெலப்பு. சாதியின் கோரமுகம் பார்த்து விட்ட மனசின் அதிர்வு.

களையற்று, உயிர்வற்றி... பிரேத முகமாய் தோற்ற மளிக்கிற பயங்கரம். பேயடித்தவனாக இருந்தான். சாதிப் பேய்.

''என்னய்யா? என்னமும் ஆச்சா? சண்டை சத்தமா?'' என்று பதறிப் பதைத்து... அலை பாய்ந்து கேட்கிற அம்மாவை நிமிர்ந்து பார்த்தான்.

''பயப்படாதேம்மா... ஒண்ணுமில்லேம்மா...'' என்று முதிர்ந்த பெரியவனைப் போல... நிறுத்தி நிதானமாகச் சொன்னான்.

நிதானப்பட்ட அந்தச் சொற்களில், ஆழ்ந்துறைந்த வலி இருந்தது. அம்மா கொடுத்த காப்பி (டீ)யை குடித்தான். குளித்தான். காற்சட்டையையும், மேல் சட்டையையும் மாற்றிக் கொண்டான். கொடியில் கிடந்த துண்டையும் எடுத்துக் கொண்டான். அம்மா போட்ட சோற்றை

சாப்பிட்டான். அம்மா கேட்டதற்கெல்லாம்... வெறுமனே 'ம்' கொட்டினான். சாதிப் பேயடிபட்டவனாக யந்திரமாக - உயிர்வற்றிய நடைப்பிணமாக...

தெருவிளக்குகளுக்கு தப்பித்த இருள், வீடுகளின் சந்துகளில். பன்றிகளின் உறுமல். கல் தொட்டியில், 'உர்ர்ருட்ட், உர்ர்ருட், டென்று கஞ்சியை உறிகிற பன்றிக் குட்டிகள். தெருவிளக்கின் ட்யூப்லைட்டைச் சுற்றி மொய்க்கிற ஒலுங்கு (கொசு)கள்.

''யம்மா... நா போய்ட்டு வாரேன்ம்மா...''

''கொழைக்குப் போறீயா?''

''ம்''

''வீரபாண்டி சாமியவுக வாறாக இல்லே?''

''ம்''

''பத்திரமாகப் போய்ட்டு வாப்பா. கல்லு முள்ளு கால்லே பட்டுராம... கவனமா வந்து சேருய்யா...''

ஊர் மந்தை நோக்கி நடக்கிற போது, மனசுக்குள் அம்மாவின் குரல். 'வீரபாண்டி சாமியவுக''

பிள்ளை வயது. மகனின் தோழன். மகன் போடா வாடா என்று பேசுகிற அளவுக்கு நெருக்கமானவன்.

''சாமியவுக...''

வழக்கம் போலத் தான் அம்மா இன்றும் உச்சரித்தாள். இவனுக்கு இன்றைக்குத் தான், இதன் வித்தியாசம் உறுத்துகிறது.

சாதிப்பேயின் அரூபக் கொடூரம். ஆத்மாவின் சுபாவ மாக படிந்திருக்கிறது. மகன் வயசுப் பையனை 'சாமியவுக' என்று சொல்லும்படி ஆக்கியிருக்கிறது.

வீரபாண்டி தயாராக இருந்தான். வழக்கமான உற்சாக மாக அவனில்லை. அவன் முகத்திலும் ஒரு குழப்பம். கண்ணில் கலவரம். எதையோ விழுங்கமாட்டாமல், திணறுவதைப் போன்ற முகத்தோற்றம்.

''என்னடா... ரொம்ப லேட்டா வர்றே?''

''ம்ளச்சூ...'' சுரத்தில்லாத செந்தட்டி.

''என்னடா... என்னமோ மாதிரியிருக்கே? சாப்புடலியா?''

''அதெல்லாம்... வவுறுமுட்டத்தின்னாச்சு''

''பெறகு... என்னாச்சு?''

''சரி... சரி... வாடா... வீரபாண்டி. வெருசா போய்ட்டு வந்துருவோம்...''

இருவரும் புறப்பட்டனர். ஊர் மந்தை வெளிச்சத்தை விட்டு விட்டு... இருட்டுக் காட்டுக்குள் நுழைகின்றனர்.

பீடியை பற்ற வைத்துக் கொள்கிற வீரபாண்டி. பீடிக் கங்கின் சிவப்பு, கொள்ளிக் கண்ணாக தெரிகிறது. பழகிய பாதை. பாதைக்குப் பழகிய பாதங்கள். இருட்டுக்குப் பழகிப் போன மனக் கண்ணின் விழிப்புத் தீவிரம். நடையில் சுதாரிப்பு இல்லை.

மயானக் கரைப் பக்கமாக நடக்கிறார்கள். உடன் நடந்து வருகிற மௌனம், மன அழுத்தத்தைச் சொல்கிறது. நீள் தயக்கம் தாண்டி... சிரமப்பட்டு... மௌனத்தை நொறுக்குகிற வீரபாண்டி.

''டேய் செந்தட்டி, இப்ப ஒண்ணு சொல்லப் போறேன்டா, தப்பா எடுத்துக்காதேடா''

''ம்''

''ஊர்லே... எங்க சொந்தக்காரங்க எல்லாரும் என்னைப் போட்டு வாட்டி வதக்குறாக. ரொம்பச் சத்தம் போடுறாக. கண்டிக்கிறாக''

''ம்''

''நானும் ஒரு முடிவுக்கு வந்துட்டேண்டா...''

''சொல்லுடா... வீரபாண்டி''

''காட்டுக்குள்ளே நாம ரெண்டு பேரும் எப்பவும் போல... ''போடா வாடா''ன்னு பேசிக்குவோம்டா...''

''ம். ஊருக்குள்ளே?''

''எல்லாரையும் போல நாம பேசிக்கிடுவோம்டா''

''எப்புடிடா...? ஒன்னை நா... 'சாமி'ன்னு கூப்புடவா?' ''வேறவழி தெரியலேடா'' எல்லோரையும் அரட்டுகிற வீரபாண்டி சிறுபிள்ளை போல தடுமாறித் தத்தளிக்கிறான்.

மயானக் கரையில் ஓர் உறவு செத்துக் கொண்டிருப் பதாக உணர்கிற செந்தட்டி. சுற்றிலும் இருள். சமூக இருள்.



## 13

வீரபாண்டியின் அய்யா வாசல்படிக்கு வலது புற முள்ள தாழ்வாரத் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார். நரைத்த மீசையை திருகிக் கொள்கிறார். போட்டிருக்கிற வெற்றிலையை மெல்லுகிற சுகம். எச்சில் கலவையில் ஒரு துவர்ப்பு ருசி. அதை வாய்க்குள் அதக்கி வைத்து, வாசத்தை ருசிப்பதில் ஒரு லாகிரி.

''அய்யா, ராசா... எம் மகனே... இங்க வாடா...'' வெற்றிலைச் சாற்றை காப்பாற்றுவதற்காக அண்ணாக்க முகத்தை மலர்த்திக் கொண்டு கூப்பிடுகிறார். விடியற்கால வெயில். உஷ்ணமில்லாத தங்கத் தூள் சிதறலான வெயில்.

''என்னய்யா...?'' உள்ளிருந்து வந்து நிற்கிற வீரபாண்டி. அரைகுறையாக எழுந்து... இடது கையின் இரு விரலை உதடுகளின் குறுக்காக நிறுத்தி... வெற்றிலைச் சாற்றை பீச்சியடிக்கிறார். வானவில் வளைசலாக வடிவம் காட்டி, தூரமாய் தரையில் ரத்தக் கோலம் போடுகிறது.

நேற்றுத்தான் முடிவெட்டி குளித்திருக்கிறான். நல்ல சிவந்த பயல். கருகருவென தலைமுடி. நன்றாக ஒதுக்கி நறுக்கிவிடப்பட்டிருக்கும் மீசை, பதினெட்டு வயசிருக்குமா? நல்ல முழுத்த இளவட்டப் பயலாகி விட்டான்.

இவன் அஞ்சுவருஷமாக மேய்த்த ஆட்டில், நல்ல வரவு. இருந்த ஆடுகளும் ரெண்டு, மூன்று என்று குட்டிகள் போடுகிற வம்சம். வளர்ந்த கிடாய்களையும், பெண் மறிகளையும் விற்றுவிற்று முதலாக்கியதில்... ஒரு பசுமாடு வந்து விட்டது. அதுவும் பொட்டைக் கன்று போட்டு, காலையில் எட்டு, சாயங்காலம் ஏழு லிட்டர் என்று பால் கருகிறது. கையில் நாலு காசு ஊறுகிறது.

முழுத்த வாலிபனாகி விட்ட பயலை... சின்னப் பயல் மாதிரி இன்னும் ஆடுகளின் பின்னால் அலையவிட வேண்டுமா? காடுகரைகளுக்கு விவசாய வேலைகளுக்கு அனுப்பலாமே... பாத்திகட்டு, நீர் பாய்ச்சுதல், உழவு, என்று மம்பட்டி வேலைகளுக்கு அனுப்பிவிடலாமே...

''என்னய்யா... கூப்டீகளா?''

''ஆமடா... இன்னும் நீ ஆட்டுக்கம்போடு காடு சுத்தணுமா?''

''பெறவு?''

''மம்பட்டி வேலைக்குப் போகலாமே...''

வீரபாண்டிக்குள் ஒரு குளிர் காற்றாக வந்து போகிற மாடத்தி. முள் நறுக்க ஆற்றுக்குள் அடிக்கடி வருவாள். சேரிச்சிட்டு. தேனை அள்ளிப் பூசின மாதிரி ஒரு நிறம். பாவாடை, தாவணி, துள்ளல் ஓட்டம்.

இளம் மறிக்குரிய மினுமினுப்பு. கண்ணின் மின்னல். கனவைக் குழைத்து பூசின மாதிரியோர்... கன்னமிருது.

இவனது கண்ணியில் சிக்க மறுக்கிற சின்னச்சிட்டு. அவள் கண்ணியில் சிக்கிக் கொண்ட இவன். தேனில் கிடந்து தவிக்கும் எறும்பாக... இவன்.

'அவளை எப்படியும் மடக்கணும். கைக்குள் போடணும். அனுபவிக்கணும்.' தீராப் போதையாக அவனை அலைக் கழித்து, இழுத்தடிக்கிற மோக வெறி.

''இல்லேய்யா... இன்னும் ரெண்டு வருஷம் போவட்டும். செந்தட்டிக்கும் என்னை விட்டா... யாரு தொணை?''

''அந்தப் பயலுக்காகவா... நீ வெம்பரப்பான காட்லே, வேனாக்கொதிக்குற வெய்யில்லே, நின்னு சாகணும்?''

''உசுருக்கு உசுரா பழகிட்டோம்லே?''

நழுவுகிறான். முற்றத்தில் இறங்கி, தெருவுக்குள் நடக்கிறான். தான் சொன்ன பொய். கபடம்.

''அந்தப் பயலுக்காகவா... நீ'' என்று கேட்கிற அய்யா வின் குரல், இவனது மனசாட்சியைக் குடைகிறது.

'மாடத்திக்காக' என்ற உண்மை, அவனுள்ளிருந்து முள்ளாக நீண்டு வந்து, அவனைக் குத்துகிறது. முள்ளைப்

பிடுங்கி, தூர எறிந்து விட்டு... ஆழ்ந்த பெருமூச்சில் ஆன்மாவை வெளியே விட்டு விட்டான், வீரபாண்டி.

டீக்கடைப் பக்கம் போனான். ரெண்டு வடையை பிய்த்து உள்ளே தள்ளினான். ''டீ போடப்பா'' என்று சொல்லிவிட்டு, கடையில் கிடந்த பத்திரிகையில் சினிமாச் செய்தி உள்ள வண்ணப் பேப்பரை எடுத்தான்.

பாதி மார்பு தெரிய ஒரு பெண் பெரிய சைஸில் நின்றாள். இறுக்கிப் பிடித்த தோல் மாதிரியான ஜிகினா பேன்ட். முக்கோண ஜிகினா கர்சீப்பே ப்ரா மாதிரி மேலே. தமிழ்ச் சினிமா கதாநாயகி தான். தமிழ்ச் சினிமாவில் தமிழ்ப் பெண் இல்லை.

இவனுக்குள் பூப் போட்ட பாவாடை சடசடக்க ஓடுகிற மாடத்தி. பூ வேயில்லாத ரோஜாநிற தாவணி. அதே நிற ஜாக்கட். மாடத்தி தமிழ்ப் பெண். தமிழ்ப் பண்பாட்டை ஆடையாக உடுத்தியிருக்கிறாள். கரண்டைக்கால் கூட வெளித் தெரியாது. ஆனால் பூந்தோட்ட அழகு.

வீரபாண்டி அந்தச் சதைக் கோளத்தையே வெறித்தான். டீயடித்தான். பீடியை பற்ற வைத்துக் கொண்டான்.

வெளியே வந்தால் -

ராஜகோபால்.

நேற்று அவர் புஞ்சையில்தான் ஆமணக்குக் கொழை ஒடிக்க வேண்டியிருந்தது. தகரக் கதவைத் தாண்டி உள் நுழைந்திருந்தான். போதுமானதாக இல்லை கொழை. பிறகு என்ன செய்ய? பருத்திச் செடிகளை காயும் பூவும் கொழையுமான வேரோடு மடக் மடக்கென்று பிடுங்கினான்.

செந்தட்டி கூட மென்மையாகக் கண்டித்தான்.

''டேய் வீரபாண்டி, வேண்டாம்டா. வெள்ளாமையை வேரோட புடுங்குறது சின்னப்புள்ளை கழுத்தைத் திருகுறது மாதிரியான பாவம்டா''

''ஏலேய் மயிராண்டி, பேசாம சொன்னதைச் செய்டா...''

''அப்பவும்... நாலஞ்சு வருஷமா இந்தப் புஞ்சைக் காரரை நீ பாடாய் படுத்துறேடா. பாவம்டா''

''பாவம் பாத்தா... ஆடு குட்டி வளர்க்க முடியாதுடா...''

டீக்கடை வாசலில் மறித்த மாதிரி நின்று கொண்டு, ஊமைக் கோபமாய் முறைக்கிற ராஜகோபால். பார்த்தும், பார்க்காத அலட்சியமாக ஒதுங்கி வெளியேறுகிற வீரபாண்டி.

அவன் விட்ட பீடிப் புகை, ராஜகோபால் முகத்தில் மோதி விலகுகிறது. திமிரும், மதர்ப்புமாக நடந்து போகிற வீரபாண்டியின் அகல முதுகையே வெறிக்கிற அவர் பொருமுகிறார். வன்மத்தில் கனல்கிற கண்கள். உள்ளூறைகிற கோபம். திணிக்கப்பட்ட கரு மருந்தாக விம்மித் திணறுகிற உள் குமைச்சல்.

''போய்யா...'' என்று மனசுக்குள் முனங்கிவிட்டு, 'விறு விறு' வென்று நடக்கிற வீரபாண்டி. செந்தட்டியை தேடிப் போகிறபோது...

எதிரே வருகிற ஆட்டு வியாபாரி.

''என்ன வீரபாண்டி, வெலைக்குப் போடுற மாதிரி உருப்படிக கெடக்குதா?''

''ஏவாரத்துக்கா, கசாப்புக்கா?''

''ரெண்டுக்கும் தான்''

''செந்தட்டிகிட்டே கெடக்கு. ரெண்டு கிடாக்குட்டி. ஒரு பொம்மறி''

'பொம்மறியை தருவானா? ஈன்டதுன்னா வம்சம் பெருகுமே''

''இது மலடா இருக்கும்னு நெனைக்கேன். கொம்புக் கிடாய் எத்தனை தடவை ''மேலே'' வுழுந்தாலும்... பலப்பட மாட்டேங்குது. கொழுத்துப் போய் திரியுது''

''பலப்படவே மாட்டேங்குதா? அப்ப, கசாப்பாக்கிர வேண்டியதுதான். நீயும் செந்தட்டிகிட்டே சொல்லு. நாளைக்கு முடிச்சிருவோம்.''

உல்லன் சால்வையை துண்டு மாதிரி போர்த்திக் கொண்டு போகிற வியாபாரி, ''சீரெட்டு வேணுமா?'' என்று பாக்கட்டை நீட்டுகிறார்.

''வேண்டாம். நமக்கு பீடிதான் லாயக்கு''

செந்தட்டியும், வீரபாண்டியும் ஆட்டை கிளப்பினர், மேய்ச்சலுக்கு. ஆடுகளும் குட்டிகளும் வண்டிப் பாதையில் போய்க் கொண்டிருந்தன. பின்னால் வருகின்றனர் இரு வரும். செந்தட்டிக்கும் முக மெல்லாம் ரோமம். கறுத்த ஆள். நல்ல சதைப் பிடிப்பு. மடித்துக் கட்டிய கைலி. பனியன். துண்டு. ஆட்டுக் கம்பு.

''என்ன... ஊர்மந்தையை தாண்டியாச்சு... 'ஏலேய்'ன்னு சொல்லலாமா...இனிமே?'' அவன் குரலில் இருந்த ஏளனமும், வேதனையும்.

''சொல்லாம்டா...'' என்கிற வீரபாண்டி, செந்தட்டி முகத்தை திரும்பிப் பார்த்தான். அவன் கண்ணில் மனசின் ரணம். அவமானவலி.

இவனுக்கு குற்ற உணர்ச்சியின் முள் உறுத்தல். இந்த உணர்வுச் சூழலை விட்டு விலக ஆசைப்பட்ட வீரபாண்டி.

''டேய் செந்தட்டி, இன்னைக்கு டீக்கடையிலே ராசகோபால் பாத்தார்டா, ரொம்ப மொறைச்சார்டா''

''அவரோட ரொம்ப மோதுறே நீ. வெள்ளாமையிலே செய்ற அழிமானமும் ரொம்ப. அதையும் அடாவடியா செய்றே. அவரைச் சீண்டிச் சீண்டி உசுப்புறே...''

''ஆமா... அவரு பெரீய்ய்ய கொம்பாக்கும்? அவருக் கெல்லாம் பயப்படணுமோ? என்னோட கரண்டைக் கால் மயித்தைக் கூட அவராலே புடுங்க முடியாதுடா''

''சரிடா... தெனம் தெனம்... அவரு கெணத்துலேயே ஏண்டா குளிக்குறே?''

''அவரு கெணத்துலேதான்... ஏறிவர்றதுக்கு படி இருக்கு. குதிச்சு வெளையாட வசதியாயிருக்கு. கெணத்துலே குளிச்சா... அவருக்கு வலிக்கா? அவரு முதுகிலேயா குதிக்கேன்?''

''நீ சொல்றதை நீயே நம்பமாட்டேடா. பொய் சொல்றே.''

''என்னடா சொல்றே?''

''ஆமா... ராசகோபாலு மகள், சடங்கான பொண்ணு. லட்சணமான பொண்ணு. அவா புஞ்சையிலே வேலை செய்ற அன்னிக்குத்தானே.. நீ கெணத்துல குளிக்கப் போறே? என்னத்துக்கு? துணி மணியில்லாம... அம் மணமா... பம்ப்ஷெட் ரூமோட உச்சியிலே ஏறி நின்று ஆடிக் கிட்டே... அந்தப் பொண்ணைக் கவர்றதுக்கான கூச்ச லோட கெணத்துலே குதிச்சே. நா கவனிக்கிற இந்த ரகசியத்தை, அவரு கவனிக்கமாட்டாராடா? தகப்பன் மனசு கொதிக்காதா?''

''கொதிச்சா... கொழம்பு வைக்கட்டும். எனக்கென்னடா? அவரு மக பெரிய ரதின்னா... வூட்டுக்குள்ளேயே வைச்சுக் கிட வேண்டியது தானே? நா என்ன அவ கையைப் புடிச்சா... இழுத்துட்டேன்?''

''போடா... சாதிச் செல்வாக்கு இருக்குங்குற திமிர்லே... நீ கண்ணு மண்ணு தெரியாம ஆட்டம் போடுறேடா. இது ஒனக்கே நல்லதுல்லேடா...''

''என்ன... நீயே என்னை பயமுறுத்துறீயா?''

''நா... நல்லதுக்குச் சொல்லுதேன். கேட்டாக் கேளு. கேக்காட்டா... குழியிலே போய் விழு. எனக்கென்ன?''

சுருதியை குறைக்கிற செந்தட்டி, மனதால் ஒதுங்கி பம்முகிற அவன். இதுக்கும் மேலாக வன்மையோடு எடுத்துச் சொன்னால், பிரச்சினையின் திசையே மாறும். குளறுபடியாகும்.

ஆடுகள் மேய்ந்து கொண்டிருக்கும். இருவரும் பேசிக் கொண்டிருப்பார்கள். தூரத்தில்... வேலிமரங்களுக் கிடையே... மாடத்தி போவதை செந்தட்டி பார்ப்பான். அவ்வளவுதான்.

வீரபாண்டியின் பேச்சு தடுமாறும். நிலைகொள்ளாத பார்வை. உளறலாகப் பேசுவான்.

''ஆட்டைப் பார்த்துக்க... இந்த வாரேன்...''

''வெருசா வந்துருடா''

''வருவேண்டா..'' போய்விடுவான், வீரபாண்டி. மாடத்தியை மேயத்தான் இந்தக் கிடாய் போகிறது என்கிற வீச்சத்தை உணர்கிற செந்தட்டி. ஒன்றும் சொல்ல முடி யாது. தடுத்தால்... சாதிப் பிரச்சனை வரும்.

நட்பே சாகும். செந்தட்டி மௌனத்தில் புதைந்து தடுமாறுகிறான்.

மாடத்தி ஒஞ்சாதிக்காரி. ஒனக்கு சாதிதான் முக்கியம். சிநேகிதன் முக்கியம் இல்லே? அப்படித்தானாடா? என்று விஷம்மும், விஷமுமாக வார்த்தைகளை எறிந்து விட்டால்?



## 14

மாடத்தி வெட்டுண்ட வாழைக்குட்டியாக தலை தாழ்ந்து கிடக்கிறாள். எண்ணெய் காணாமல் செம்பட்டை பாய்ந்த தலைமுடி, தாறுமாறகக் கிடக்கிறது. வயிற்றில் பாரம். மாசம் ஏழுக்குரிய புடைப்பு.

ஊர்மந்தையில் பஞ்சாயத்து கூடியிருந்தது. சேரிக்குள் பிரச்சினையாகி... ''கல்யாணமாகாதவளுக்கு கர்ப்பம் வந்ததெப்படி'' என்ற கேள்வியாகி... கேள்வி விசுவரூபமெடுத்து... கேள்விக் கொக்கியில் சேரியே சிக்கி, சுழற்றப் பட...

ஊர்க்காரர்கள் முன்னிலையில் வந்து விட்டது, விவகாரம். மொத்தஊரே திரண்டிருக்கிறது. வேலை ஜோலிகளை அப்படியப்படியே போட்டுவிட்டு ஆஜராகியிருக்கின்றனர், சகலரும். வீரபாண்டியும், செந்தட்டியும் கூட ஆடுகளைப் பத்தவில்லை.

ஒரு சில பெண்களும் கூட வந்திருக்கின்றனர். சேரிப் பெண்கள் ஜாஸ்தி. ஊர்ப்பெண்கள் தூரத்தில் தள்ளி... வீட்டுக் கூரை நிழல்களில் கூட்டம் கூட்டமாய் உட்கார்ந் திருக்கின்றனர்.

ஆண்களும், வயசாளிகளும், ஆள்ஆளுக்கு வாய்க்கு வந்ததை பேசிச் சளசளத்துக் கொண்டிருந்தனர். ஓலைக் கூரையில் மழை பெய்கிற மாதிரி... ஒரே இரைச்சல் காடு. மனிதச்சளசளப்பு, வம்பளப்புகள்.

''ஏய்க்... எல்லாரும் பேச்சை நிறுத்துங்கப்பா. வாயைப் பொத்துங்கப்பா.''

''வளவளா வைக்கப்படப்புன்னு ஒரே சலசலப்பு தானா? ஒரு பொண்ணு உசுரை கையிலே புடிச்சுக்கிட்டு நிக்கா... நாம என்னடான்னா... கேலியும், கிண்டலுமா பேசி... ஊர்ப் பாயாசம் குடிக்கோம்''

பெரியாட்கள் சத்தம் உயர்ந்து, கண்டிப்பு நிறைந்த குரலில் பேசவும், சட்டென்று வந்தமர்ந்த மௌனம். கழுகுச் சிறகின் நிழலாகப்படிந்த இறுக்கம்.

''யம்மா... என்ன நெலவரம், என்ன வெவகாரம்னு எல்லாருக்கும் தெரியுது. நீ சின்னப் பொண்ணு. யார் கிட்டேயோ... ஏமாந்துருக்கே. வவுத்துலே ஒரு முழு உசுரைச் சொமந்துக்கிட்டிருக்கே. அந்த உசுருக்குச் சொந்தக் காரன் யாருன்னு நீ கையை நீட்டு...''

''ஆமம்மா... யாராயிருந்தாலும் சரி. யாருக்கும் நீ பயப்பட வேண்டாம். நடுங்கவேண்டாம். உண்மை எதுவோ... அதைத் தைரியமாகச் சொல்லு''

மொத்தக் கூட்டமும் மாடத்தியைப் பார்க்க, மாடத்தி மொத்தக் கூட்டத்தையும் தனித்தனியாக நிதானமாக பார்த்தாள். ஒவ்வொரு முகமாய்... ஒவ்வொருகண்ணாக...

ஏளனக் கண்கள். பரிகாசக் கண்கள். இளக்காரக் கண்கள். அச்சக் கண்கள். நடுக்கக் கண்கள். மிரட்டல் கண்கள்.

ஒவ்வொரு கண்ணிலும் ஒவ்வொரு உணர்வுகள். செந்தட்டியையும் பார்த்தாள். சற்று நின்று நிலைத்த பார்வை. வீர பாண்டியின் முகம். அவனது உதடுகள். உதட்டு வரிகள். கண்கள். கன்னச் சொரசொரப்பு. பருக் களின் புள்ளிப் படைப்புகள்.

நின்று நிலைத்த பார்வை. நிலைத்து ஆய்ந்த பார்வை. ஆய்ந்து விசாரிக்கும் பார்வை. உயிரை கண்ணில் கொண்டு வந்து நிறுத்தி வினவும் பார்வை. இன்னும் சில கண்களை நின்று நிதானித்துப் பார்க்கிறாள். ''என்னம்மா... சொல்லு பயப்படாம சொல்லு. ஞாயத்தை ஊர்தரும். யாராயிருந் தாலும் தயங்காமச் சொல்லு. ஒனக்கு நீதி கெடைக்கும். சொல்லு...''

இன்னும் நாலைந்து பேர் தைர்ய வார்த்தைகள் சொல்லி... வற்புறுத்தினர். மாடத்தி... தீர்க்கமாகப் பார்த் தாள். விம்மிவரும் அழுகை. விசும்பலாக வெடிக்க யத்தனிக்கிற உணர்ச்சிகள். கோப வெறி. ஆத்திரம். ஆங்காரம். பத்ரகாளிக்குரிய மனக்கொதிப்பு. சகலத்தையும் உள்ளடக்கிக் கொண்டு கூட்டத்தைப் பார்த்தாள்.

''என்னோட பழகுன ஆம்பளை இங்க தான் இருக் காரு. ஒடம்பால் அவரு ஆம்பளைங்குறதை என்னோட வவுறு சொல்லுது. மனசுலேயும் அவரு ஆம்பளைத் தானாங்குறதை அவரே சொல்லட்டும்.''

''என்னம்மா... புரியறாப்புலே சொல்லும்மா''

''அந்த ஆளு ஆம்பளைக்குரிய துணிவுள்ள ஆளா யிருந்தா.. மனசாட்சி உள்ள மனுசராயிருந்தா...

தெய்வத்துக்குப் பயந்த ஞாயபுத்தி உள்ள நல்லவரா யிருந்தா... வாயைத் தொறந்து சபையிலே சொல்லட்டும்...''

''சொல்லைன்னா? கல்லூளிமங்கனா - ஊமைக்கள்ளனா இருந்துட்டா?''

''ஏந்தலையெழுத்துப்படி நடந்துட்டுப் போவட்டும்''

விரக்தியின் உச்சத்தில் மாடத்தி. மௌனம் காத்த மாடத்தி. கூட்டம் முழுமையையும் பார்வையால் வருடி, வீர பாண்டியிடம் நின்று விலகுகிற மாடத்தி.

மௌனமாக நகர்கிற நிமிடங்கள். நேர நீட்சியில் வரும் முணுமுணுப்புகள். சலசலப்புகள். மனித அபிப் பிராயங்கள். கசகசப்புகள். ஒன்றும் இரண்டுமாக நகர்கிற மனிதக்கால்கள். கூடியிருக்கிற கூட்டம் கரைகிறது.

மாடத்தி... ரௌத்ரம் சீறிய பத்ரகாளியாக கொந்தளித் தாள்.

''ஆம்பளையாயிருந்து ஒன்னோட பழகுன ஆளு, மனசாலே ஆம்பளையில்லேன்னு தெரிஞ்சுபோச்சு. இப்படிப்பட்ட மனசாட்சியில்லாத மாபாவியோட வாழ்ற வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா? த்தூ!''

காறித்துப்பிவிட்டு வீராங்கனையாக வெளியேறி... சேரி நோக்கி நடக்கிற மாடத்தி.

செந்தட்டி தவித்தான். வீரபாண்டியின் கண்ணுக்குள் ஊடுருவிப் பார்த்தான். அவனது மனசில் ஆணிவேர் வரைக்கும் நீள்கிற பார்வை ஈட்டியைப் பாய்ச்சினான்.

வீரபாண்டி, அங்கும் இங்குமாக வேடிக்கை பார்த் தான். சிரித்தான். பேசினான். செந்தட்டி பக்கம் மட்டும் திரும்பவேயில்லை.

செந்தட்டிக்குள் பற்றிக்கொண்டு வருகிறது. கோபம் கோபமாய் வருகிறது. அப்படியே பாய்ந்து... அவனது கழுத்தில் துண்டைப் போட்டு இழுத்து, ''உண்மையைச் சொல்லுடா... நாயே'' என்று கத்த வேண்டும் போலிருந்தது. உயிருக்குயிரான நண்பன்தான். உண்மையற்ற மிருகம் என்றறிகிறபோது வருகிற ரௌத்ரம்.

மறுநாள் விடிந்த முதல்குரலே அபசுரமாக இருந்தது.

''மாடத்தி மாண்டுட்டாளே... அரளிவெதையிலே ரெண்டு உசுரையும் மாய்ச்சிக்கிட்டாளே...'' ஒரு கிழவியின் கதறல், செந்தட்டியின் இதயத்தையே அதிர வைத்தது.

சேரியே வாரிச்சுருட்டிக் கொண்டு எழுந்தது. ''ஐயோ ஐயய்யோ'' என்ற கதறலும், வீறிடலுமாக அலைய குலைய ஓடுகிற பெண்கள். பரிதவிப்பும், அங்கலாய்ப்பும், அவலப் புலம்பலுமாக ஓடுகிற ஆட்கள்.

மரணம். சாதிகடந்த உயிர்களின் நிஜம். சாதி பேதமற்று... ஊர்க்காரர்கள் மனசுகளும் அதிர்ந்தன. வாயிலும், மார்பிலும் அறைந்து கொண்டு கதறியவாறு ஓடுகிற ஊர்ப்பெண்கள்.

''கையை நீட்டிச் சொல்லச் சொல்லி மன்றாடி மருகுனாகளே... பாதகத்தி... வாயைத் தொறந்து சொல்லி யிருக்கக் கூடாதா? இப்படியா மாண்டுமடியணும்?''

''அரளிக் கொட்டையிலே உயிரைமாய்க்குறதுக்கா... இம்புட்டுக் காலம் வாழ்ந்தா...?''

''ஐயோ... ஐயர்வூட்டுப் பொண்ணுமாதிரி மஞ்சக் கெழங்கா இருந்தாளே... ஓடியாடி வேலைசோலி பாப்பாளே... நிமிசத்துலே சாம்பலாகப் போறாளே...''

''இந்தப் பச்சை மண்ணை இக்கதியாக்குன பாவிப்பய யாராயிருந்தாலும் சரி... அவன் நாசமாய்ப் போகணும். செத்தாலும் நாறப்பயசாவு சாகணும்''

ஆள் ஆளாளுக்கு மனசின் ஈரத்தையும், தீக்கங்கு களையும் வார்த்தைகளாக இரைத்துக் கொண்டே போகிற பெண்கள். மனித மனசுக்காரர்கள். ஈரம் தொலைக்காத கிராமத்து மனசுகள்.

செந்தட்டிக்கு நெஞ்சுகிடந்து கொதித்தது. இப்பவே அரிவாளைத் தீட்டுகிற மனசு. ஒரே போடாக போட்டுத் தள்ளி, வீர பாண்டியையும், மாடத்தியோடு சேர்த்துப் பொசுக்க வேண்டும் என்கிற மனத்திணவு. திணவுத் தீ.

வெளியே வந்தான்.

ஊர் முழுக்க திரண்டு அலைமோதி வருகிறது. அழுகை யும் புலம்பலுமாய் கண்ணீர் சிந்தி வருகிற ஊர்ஜனம். பரிதாபமும், சோகப் பரிதவிப்புமான ஈர அங்கலாய்ப்பு கள். எல்லா மனிதருக்குள்ளும் ஆழத்திலிருக்கும் மனிதப் பேருணர்வு, எல்லாத்தடைகளையும் கடந்து, பீறிட்டு, வெளிப்பட்டு... மானுடப்பிரவாகமாக சங்கமித்து... ஈரச் சொற்களும், பரிதவிப்புத் துடிப்புமாக காற்றையே மென்மைப் படுத்துகிற - மேன்மைப் படுத்துகிற - அபூர்வத் தருணம்.

நார்க்கட்டிலில் தூக்கிப் போட்டு ஏழெட்டு இளவட் டங்கள் கட்டிலைத் தூக்கி வருகின்றனர். கட்டிலில் விறைத்துக் கிடக்கிற மாடத்தி. வலியை சகிக்க உதட்டைக் கடித்த நிலை. வெறிக்கிற கண்ணின் சவக்களை. நாசி நுனியில் ரத்தக் கறுப்புக் கோடு. புடைத்த வயிறு.

பார்க்கப் பார்க்க தகிக்கிறது, செந்தட்டிக்கு. மனத்தீ. தீ ஜுவாலைகளுக்குள் எரிந்து கருகும் நட்பு.

நிமிஷத்தில் சாம்பலானாள், மாடத்தி.

மறுநாள் -

ஆடுகளையும், குட்டிகளையும் பத்திக் கொண்டு போன செந்தட்டி. 'வீரபாண்டியை என்ன செய்ய' என்ற ஒரே குடைச்சல்.

அவனைத்தண்டிக்கணும். வெட்டுவதா? கொல்வதா? கொலை, ஒரு தண்டனையாகுமா? அதைவிடவும் கூடுதலான. கொடுமையான. தண்டனை தரணுமே... என்னது? என்னது? என்னது?

வீரபாண்டியின் ஆடுகளும் வந்தன. அவனும் ஆட்டுக் கம்புடன் ''ஏலேய்'' என்ற உல்லாசமான கத்தலோடு ஓடி வந்தான். வெறுப்புடன் ஏறிட்ட செந்தட்டி,

''ஏய்க், வீரபாண்டி... நீ ஒரு கொலைகாரப்பய. ஈவு இரக்கமில்லாத மிருகப் பெறவி. இன்னிக்குத்தான் கடைசி. இனிமே எம்மூஞ்சியிலேயே முழிக்காதேடா. கூடப் பழகுன தோஷத்துக்காக ஒன்னைக் கொல்லாம வுடுதேன். இனிமே ஏங்கூட நீ பேசாதேடா... நானும் ஒங்கூட பேசவே மாட்டேன்டா... ஜென்மத்துக்கும்''

வன்மமும், கோபவெறியுமாக சொல்லிவிட்டு... கருகிச்சாம்பலான நட்பை ஊதித்தள்ளிவிட்டு... ஆடுகளை பொழுதுவரும் திசை நோக்கிப் பத்துகிற செந்தட்டி.

சவக்களை படிந்த நிலையில் வீரபாண்டி.

'மாடத்தியின் ஆன்மா ஒப்புக் கொள்ளத்தக்க தண்டனை இதுதான்' என்ற திருப்தி, செந்தட்டிக்குள்.



# 15

**கோ**ழி கூவுகிற நேரத்துக்கே இடுப்பில் கட்டிய நூல் கயிறும், செருப்புமாக புறப்பட்டு விட்டான் செந்தட்டி. இருட்டு அவனை ஒன்றுமே செய்யவில்லை, வெயில் மாதிரித்தான். பொருட்படுத்தவே மாட்டான்.

வெயிலில் ஆடு மேய்க்கவும், இருட்டில் கொழை பார்ப்பதுவும் தான் பெருமூச்சைப் போன்ற இயல்பான வேலைகள்.

ஆற்றுக்குள் இறங்கினான். பனந்தோப்பு மயில்கள் அப்போதே கத்துகின்றன. காக்காவின் கரைச்சல். ஏற்கெனவே ஆள் அரவம் கேட்டு விட்டதோ...

தனக்கும் முன்னால் யாரோ மனிதர் போயிருக் கிறார்கள். யாரது? வீரபாண்டிப் பயலா?

அவனோடு பேசி ஆறு மாசத்துக்கும் மேலாகி விட்டது. ஆவலோடு முகம் பார்ப்பான். செந்தட்டி வெறுப்பும், விறைப்புமாக திரும்பிக் கொள்வான். ''ஈவு இரக்கமில்லாத பய... ஈரமத்த பய''

எதிரில் தட்டுப்படுகிறபோதெல்லாம்... வீரபாண்டி பேச ஆசைப்படுவான். ஆர்வமாக கண்பார்ப்பான். ஏதோ சொல்ல முனைகிற மாதிரியான உதட்டசைவு.

செந்தட்டி புறக்கணித்து விடுவான். காறித்துப்பத் தோன்றும்.

**அவனுக்குள் மாடத்தி. மஞ்சள் கிழங்காக ஒடித்திரிந்த மாடத்தி. செத்து விறைத்துக் கிடந்த மாடத்தி.**

**''மனசாலே ஆம்பளையில்லே அந்த ஆளு'' என்று ரெளத்ரமும், இளக்ச~ரமாகவும், சீறிச் சினந்த மாடத்தி, செத்து, தன் வாழ்வை முடித்துக் கொண்ட பரிதா பத்துக்குரிய மாடத்தி.**

**ஆற்றுக்கரையை ஏறினான். ராஜகோபால் புஞ்சையில் ஆள் நடமாட்டம். மனித அரவம். 'நம்ம பயலா?'**

இல்லை. நாலைந்து பேர் தட்டுப்படுகின்றனர். பம்ப் ஷெட் ரூமின் லைட் எரிகிறது. ஏதோ மின்சார வேலை. மோட்டாரைக் கழற்றி மாட்டுகிறார்களோ? ப்யூஸ் கேரியல் களை கழற்றுகிற சத்தம். உருவிப் பிடுங்குகிற சத்தம். சொருகி, 'டப்'பென்று அறைந்து பொருத்துகிற சத்தம்.

நமக்கென்ன? என்னமும் செய்யட்டும். நம்ம சோலியை நாம பார்ப்போம்...

நடையை எட்டிப் போடுகிற செந்தட்டி.

செந்தட்டிக்குள் நேற்றைய ராஜகோபால். ஓடைப் பக்கம் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த போது, அந்தப் பக்கம் உள்ள வயற்காட்டிலிருந்து வந்து கொண்டிருந்த ராஜகோபால்.

இவன் ஒற்றையாளாக நிற்பதைப் பார்த்ததும்... அவரும் நிற்கிறார். ''என்னடா செந்தட்டி, ஒன்னோட வாலை எங்க?''

''வெட்டி விட்டாச்சு''

''ஒட்டிப் பொறந்த ரெட்டையா, அப்பிக்கிட்டே திரிஞ்சீகளே... என்னாச்சு?''

''அவன் போக்கே... எனக்குப் பிடிக்கலே, சாமி...''

''ரொம்பச் சேட்டை. தாங்க முடியாத திமிர். மப் பேறிப் போய்த் திரியுறான். வெகு சீக்கிரத்துலே குழியிலே வுழுந்துருவான். குழி காத்துக்கிடக்கு. ஆண்டவன் தள்ளு வான்''.

''உங்களை அவன் ரொம்பப் பாடாய் படுத்திட்டான். ரொம்ப வம்புக பண்ணுனான்''

மென்னகையாக சிரித்துக் கொண்டே பேசுகிற செந்தட்டி. ஆத்திரமும், ஆங்காரமுமாய் வெடித்துச் சிதறுகிற ராஜகோபால்.

''ஏலேய்... நீ ரொம்ப அடங்குன சாதிப்பய. களத்துத் தானியத்தை, காலாலே தள்ளுனா... கையாலே அள்ளுற சாதிப்பய. அவன் ஒன்னை விட கொஞ்சம் உசத்தி. நாங்க அவனைவிட ஒசந்த சாதிடா...''

''தெரியும்லே?''

''சாதியிலே மட்டுமில்லேடா... ஒசத்தி. சகலத்து லேயும்தான். நாங்க பரம்பரைச் சம்சாரிக. மூலைமூலைக்கு காடுக. வயற்காடுக. இறவைப்புஞ்சைக. அவனோட அப்பன், எங்க மாடுகளை வைச்சு வேலை செய்ஞ்ச பண்ணைக் காரன். அவுக பாட்டையா, பூட்டையா எல்லாம்... எங்க பண்ணையிலே சோத்துக்கு வேலை பார்த்த கூலிப் பரம்பரை, கை கட்டி நிப்பாக. கையெடுத்துக் கும்பிட்டு, கூலி வாங்குவாக.''

''சொல்லக் கேட்டுருக்கேன்... நானும்''

''என்னமோ... இந்தப் பொடிப்பய... சொந்தமா நாலு ஆட்டுக்குட்டி வைச்சிருக்குற மப்புலே... கொஞ்சமா ஆட்டம் போடுதான்? இவனாலே எங்களுக்கு வந்த அழிமானம் கொஞ்சமா? அவமானம் கொஞ்சமா? கேவலம் கொஞ்சமா? ஆண்டவனுக்கே தாங்குமா? நாலுகுட்டிக

வைச்சிருக்கிற இந்தக் குட்டி நாய் தராதரம் பாக்காம துள்ளிக்கிட்டே அலையுதானே... இவன் துள்ளலை... நிலம் உள்ள நாங்க நெனைச்சா... ஒரு நிமிஷத்துலே ஒடுக்கிரமாட்டோம்? நான் என்னோட சுயரூபத்தைக் காட்டுனா... இந்த அற்பநாய் அரை நொடியிலே சாம்பலா யிருவாண்டா''

கோபமும், கொந்தளிப்புமாய் உறுமிய ராஜகோபால். அடிபட்ட பாம்பின் சீற்றமாய் தெறிக்கிற கண்கள். வன்மம் கனலும் சொற்கள்...

ஒரு நாயக்கர் புஞ்சைக்குள் செந்தட்டி நுழைகிற போது, கிழக்கு வெளுத்து விட்டது. அவசர அவசரமாக அகத்திக் கொழையை ஒடித்தான். சவுண்டல் கொழையும் ஒடித்தான். கைக்கு எட்டும் உயரத்திலிருந்த மூன்று வேப்ப மரங்கள். அவற்றிலும் கொப்புகளை பற்றி இழுத்து ஒடித் தான். கூட்டியள்ளி, கட்டிக் கொண்டு... தலையில் பாரமாக தூக்கி வைத்து... 'வேகு... வேகு' என்று நடக்கிறபோது -

அவனுக்குள் ஒரு சின்ன மின்னல்.

பம்ப் ஷெட் மோட்டார் ரிப்பேர் நடக்கிறதென்றால், ரகசியமா என்னத்துக்கு நடக்கணும்? கோழி கூவுகிற இருட்டில் என்னத்துக்காக? இருட்டில் திருட்டுதானே நடக்கும்? திருட்டுத்தனம் தானே நடக்கும்?

ப்யூஸ் கேரியல்களை உருவியும், மாட்டியும் நடந்த மும்முர வேலைகள், மனசுக்குள் மின்ன... மூளையில் ஒரு மின்சார அதிர்வு. மின்சார அதிர்ச்சியில் கருகி விறைத்த அவனது அய்யா.

மின்சார அதிர்வாக அவனுள் பரவிய யூகம்.

ஏதேனும்... கொலைகார முயற்சியா? யாரை கொலை செய்ய? ''நா என்னோட சுயரூபத்தைக் காட்டுனா... இந்த

அற்ப நாய் அரை நொடியிலே சாம்பலாயிருவாண்டா'' ராஜகோபாலின் வன்மக் குரல். அவரோட சுயரூபம் இதுதானா? மின்சாரம் தானா?

ஒன்றும் பிடிபடவில்லை செந்தட்டிக்கு. ஏதோ பிடி படுகிற மாதிரியும் இருக்கிறது. அவனுள் ஏகக் குழப்பம். யூகத்தில் எதையும் முடிவு செய்யக் கூடாது. யார் மீதும் பழி சொல்லக் கூடாது. யூகம் தவறாகி விட்டால்? நாமல்லவா குற்றவாளியாகி, பழி சுமந்து நிற்க வேண்டும்? அவசரப் படக் கூடாது, பதறாத காரியம் சிதறாது.

வீரபாண்டியை தேடிப்போய்... சும்மாவாச்சும் சொல்லி, எச்சரிக்கலாமா? ''ராஜகோபால் புஞ்சைப்பக்கம் போகாதே... ஆபத்து'' என்று மொட்டையாகச் சொல்லலாமா?

''என்னடா ஆபத்து? என்னடா சதி? ருசிப்பிச்சுக் காட்டுடா'' என்று ராஜகோபால், இவனைப் பிடித்துக் கொண்டால்... என்ன செய்ய?

மாடத்தியைக் கொன்ற மாபாவியிடம் போய்... பேசுவதா? த்தூ!

ஊரை நெருங்குகிறான். தலையில் கனத்த பாரம். கழுத்து நரம்பு வலிக்கிறது. நெஞ்சுக்கூடு திணறுகிறது. விடிந்து பொழுது புறப்பட்டு விட்டது. காலை வெயி லிலும் பாரச்சுமை காரணமாக, வியர்த்துக் கொட்டுகிறது.

எதிரில்... தூரத்தில்... வீரபாண்டி. பீடிப்புகை நெளிய நிற்கிறான். இவனை எதிர்பார்த்து ஆவலோடு நிற்கிற தோரணை.

இவன் வாங்கித் தந்த சேவு... சீனிக்கிழங்கு... அவித்துத் தந்த தட்டாங்காய்... புஞ்சைக்காரர்களின் கோபத்திலிருந்து கவசமாக நின்று பாதுகாத்த பல தருணங்கள்.

செந்தட்டிக்குள் அலை மோதுகிற நினைவுகள். ஈர நெகிழ்வுகள். நட்புணர்ச்சி. இளகுகிற மனசு. நல்லுணர்ச் சியின் பீறிடல்.

செத்து விரைத்துக் கிடந்த மாடத்தியை நினைத்த வுடன், இளகிய மனசு, இறுகிக் கொள்கிறது. உறைந்து போகிற மனம்.

ஏதோ... விபரீத நிகழ்வு நிகழப் போகிற துர்வாசனை. இவனது மனசு உணர்கிறது. அதைப் பகிர வேண்டாமா? மனசாட்சி உறுத்தாதா? இந்த நாயிடம் போய்... பேசுவதா? ச்சீ! தெளிவில்லாத யூகத்தை, எதை நம்பிச் சொல்வது?

வீரபாண்டி முகத்தில் காலை வெயில். சிரிக்க முனைகிற உதட்டின் மெல்லிய யத்தனிப்பு. நட்பின் புன்னகை. கண்ணில் ஓர் ஆவல் மின்னல். நட்புக்காக ஏங்குகிற அவனது முகபாவனை...

செத்து விறைத்துக் கிடந்த மாடத்தி. கட்டிலில் தூக்கிச் செல்லப்பட்டு... சாம்பலாக்கப்பட்ட மாடத்தி.

செந்தட்டிக்குள் கசப்பும், வெறுப்பும் பீறிட்டது. நட்புக்கும், நியாயத்துக்கும் இடையில் இழுத்தடிக்கப் படுகிற செந்தட்டி.

மனசாட்சி வேறு உறுத்துகிறது. விபரீத நிகழ்வு குறித்த யூகம். திகில். கிலி, வெறுப்பு...பகை... ''ஒங்ககூட நா பேசவே மாட்டேன். இந்தச் ஜென்மம் பூராவும்...'' என்று இவனே சீறிச்சினந்த உக்கிரம்.

இளகுகிற மனசை இறுக்கிக் கொண்டு, விலகிச் செல்கிற செந்தட்டி. வீரபாண்டி முகம் கறுக்கிறது.

ஊருக்கு கிழக்கில் விரிந்து பரந்த கரிசல்காடு. காடு களுக்கிடையே ஓடைகள். தண்ணீர் குட்டைகள். அங்கெல் லாம் கிடக்கிற புல்.

செந்தட்டி கருவேலமரத்தின் அடியில் நின்றான். நாலு ஆடுகளும், ஏழு குட்டிகளும், ஒரு முழுக் கிடாயும் மரத்து நிழல்களில் மேய்கின்றன. சாம்பல் நிறக் கருவேலங் காய்களை 'நறுக் நறுக்' கென்று கடிக்கிற குட்டிகளின் முகங்களில் குதூகலம். வெயிலையே வெறிக்கிற செந்தட்டி.

காடுகளில் ஆளே இல்லை. வெள்ளாமை இல்லாத கோடைகாலம். ஒரு சுடு குஞ்சு கூட இல்லை. தனிமையின் வெறுமை, அவனுள் ஒரு சுமையாக அழுத்துகிறது. சலிப்புணர்ச்சியில் புதையுண்டு கிடக்கிற அவன்.

தூரத்தில் - கரிசல்காட்டை வகிர்ந்து கொண்டு நீள்கிற வண்டிப்பாதை. பாதையில் போகிற ஒரு சில சைக்கிள்கள். ஒரு சைக்கிள், ஸ்டாண்டு போட்டு நிறுத்திவிட்டு... இவனை நோக்கி வருகிற ஒரு மனிதர்.

யாராக இருக்கும்? பீடிக்கு பற்றவைக்க, தீப்பெட்டி கேட்டு வருகிறாரோ...? அடடே... என்னிடம் இல்லையே...

''ஏய்க்... செந்தட்டி...''

மேல் துண்டை அந்தரத்தில் உயர்த்தி வீசுகிறார். அழைப்பதற்கான அறிகுறி. செந்தட்டி ஓட்டமாய் ஓடினான், அவரை நோக்கி.

''என்ன இங்க நிக்கே? விஷயமே தெரியாதா, ஒனக்கு?''

''காட்லே ஆட்டைப் பாக்குற நா... என்னத்தைக் கண்டேன்?''

''அடப்பாவி... வீரபாண்டி செத்துப் போய்ட்டான்பா...''

செந்தட்டிக்குள் தீ வைத்த மாதிரியிருக்கிறது. பகீரென் கிறது. வெலவெலத்துப் போகிறான். அதிர்விலிருந்து மீள முடியாமல். கேட்க வாய்வராமல் - வார்த்தையால் விசாரிக்க இயலாமல்... அதிர்வில் உறைந்து போகிற செந்தட்டி.

''ராசகோபால் புஞ்சையைச் சுற்றி முள் அடைப்பு போட்டுருக்கு இல்லே? தகரமும் கம்பியுமா ஒரு கதவு போட்டுருந்தாக இல்லே? அதைத் தொட்டுருக்கான் வீரபாண்டி. கரண்டு ஷாக் அடிச்சு செகண்ட்லே கரிக் கட்டையாயிட்டான்''



## 16

''வீரபாண்டி செத்துட்டான்'' என்றதும் அவனுக் குள்ளிருந்து குபுக்கென்று பீறிடுகிற அழுகை. ஆடுகளை யும், குட்டிகளையும் மடக்கி வளைக்கிற பரபரப்பு. செந்தட்டிக்குள் அவசரம். ஆத்திர அவசரமாக ஆடு குட்டிகளை பத்தி, தொழுவத்தில் அடைத்துவிட்டு....

தவியாய் தவிக்கிற மனப்பதைப்போடு சுடு காட்டுக்கு ஓட்டம் பிடித்தான்.

'அடப்பாவி... அதுக்குள்ளே போய்ட்டீயா? உசுருக்கு உசுரான நட்போட பழகிட்டு... பகையோட போய்ட்டீயே'

கதறுகிற மனசு, காலுக்கு முந்திக் கொண்டு ஓடுகிறது. துயருள்ள மனசின் அழுகை. ''ஐயோ, ஐயோ'' என்ற புலம்பல்.

ஊரே வெறிச்சோடிக் கிடக்கிறது. ஓர் ஈங்குஞ்சு கூட கிடையாது. சகலமும் வீரபாண்டியைப் பார்க்க.

ஒரு டிராக்டரில் விறகு முண்டுகளை தூக்கிப் போட்டு, கட்டை விறகுகளையும், பருத்தி மார்க்கட்டுகளையும் தூக்கிப் போட்டனர். கண் மூக்கு தெரியாத வேகத்தில், தடதடத்து ஓடுகிற டிராக்டர், சுடு காட்டுக்கு.

இம்மாதிரி விப்ரீதச் சாவு சாகிற பிரேதத்தை வீட்டுக்கு கொண்டு வருவதில்லை. அப்படியே சுடுகாட்டுக்குக் கொண்டு போய் விடுவது தான்... ஊர் ஐதீகம்.

பிரேதம் சுடுகாட்டுக்கு வந்து விட்டது. நார்க்கட்டிலில் ரத்தம் வற்றி உலர்ந்து கிடக்கிற உடம்பு. களையற்ற கறுப்பு, சவக்கறுப்பு.

பார்த்த செந்தட்டிக்கு குலை பதறியது. ''ஐயோ... ஐயோ'' என்று சத்தம் போட்டுக் கதறுகிற செந்தட்டி... தனியாக ஒரு வேலி மரத்தடியில் குத்துக்கால் வைத்து உட்கார்ந்து... மடக்கி வைத்த கைகளுக்குள் முகம் புதைத்து... அழுது கொண்டேயிருக்கிற செந்தட்டி...

''ஏலேய் வீரபாண்டி... போய்ட்டீயேடா... வீரபாண்டி'' என்று திரும்ப திரும்ப புலம்பல்.

கூட்டம் பரபரக்கிறது. கட்டைகளை அடுக்குகிறது. நெஞ்சில் அடித்து கதறுகிற வீரபாண்டியின் அய்யா விடம்... அவர்களது உறவுக்காரர்கள். கோபம் கோபமாக கத்துகின்றனர். 'எரிக்க வேண்டாம். போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுக்க வேண்டும்' என்று கொதிக்கின்றனர். வீரபாண்டியின் அய்யா நெஞ்சைப் பிளக்கிற துக்கத்திலும், நிதானமாகச் சொன்னார்:

''அவரு பரம்பரைச் சம்சாரி. பெரிய பணக்காரரு. ஏகப்பட்ட நெலபுலன். எங்க குடும்பம் மூணு தலை முறையா அவரோட பண்ணையிலே அடிமையா ஒழைச் சுருக்கோம். வேர்வையை ஓசியா சிந்தியிருக்கோம்.

வீரபாண்டிதான்... அடிமையா இல்லாம... சுய தொழில்லே கால் ஊனுனான். அது பொறுக்கலே. பொசுக்கிட்டாக. போகட்டும். நன்றியில்லாத அவுகளை கடவுளு கேக்கட்டும். தண்டிக்கட்டும். போலீசுக்கு போனா... நமக்கு போன புள்ளே... திரும்பியா வந்துருவான்? ஆக வேண்டியதைக் கவனிங்க...'' சொல்லி முடித்தவுடன் குமுறி வெடித்து கதறுகிற அவரது சோகம்.

தனியாக உட்கார்ந்து நண்பனை நினைத்து... நினைத்து அழுகிற செந்தட்டி. அவன் உட்கார்ந்திருக்கிற இடத்துக்குச் சற்று தள்ளி ரெண்டு பேர்... குசுகுசுவென்று பேசிக் கொண்டிருந்தனர்.

''வீபாண்டியோட அய்யா பெருந்தன்மையாலே ராசகோபாலு தப்பிச்சாரு.. அவருக்கு நல்ல யோகம்தான். கொலை செய்ஞ்சுட்டு, தெம்பா திரியுதாரோ... சேதார மில்லாம இருப்பாரே...''

''அவரு மகனும் யோகக்காரன் தானப்பா. மாடத்தியை சினையாக்கி, கொன்னுட்டு... மமதையோட அலை யுறான்லே?''

''மாடத்தியை இந்த வீரபாண்டியும் சுத்துனான்லே?''

''இவனும் கண்ணி வைச்சுப் பார்த்தான். இவனுக்குச் சிக்காத மாடத்தி... அந்த மைனர்க்கிட்டே மயங்கிட்டா...''

புலம்பிப் புலம்பி அழுது கொண்டிருந்த செந்தட்டி காதுகளில் விழுந்த இந்தக் குசுகுசுப்பு. அவனுக்குள் மின்சார அதிர்வு. உணர்வின் ஆணிவேரையே கருக்குகிற மின் அதிர்வு.

மாடத்தியை நாசமாக்குனது... வீரபாண்டி இல்லியா? அப்போ... நா வெறுத்தது, அநியாயமா? கோபப்பட்டதும்,

குமுறிப்பேசினதும்... பேசாம மொறைச்சதும், அநியாயமா? அப்படீன்னா... நேத்து வீரபாண்டிகிட்டே என்னோட யூகத்தை சொல்லாம இருந்தது... ரொம்ப ரொம்ப அநியாயமா? அப்ப... வீரபாண்டிய்யை கொன்னதுலே, என்னோட மௌனத்துக்கும் ...ஒரு பங்கு உண்டா?''

உள்முகம் நோக்கி... குற்ற உணர்ச்சியோடு செந்தட்டி யோசித்துக் கொண்டிருந்த நேரத்தில் - குப்பென்று பற்றிக் கொண்ட தீ. காய்ந்த கட்டைகளில் சடசடத்துப் பரவுகிற அக்கினி. பருத்திமாரை ருசித்த தீ... விறகு முண்டுகளை தீண்டி, செந்தட்டியையும் ருசிக்க ஆரம்பித்த தீ...

சுற்றிலும் பரவுகிற வெக்கை, செந்தட்டியின் மன நிதானத்தையும் கருக்குகிற வெக்கை. ஒரு மரணத்துக்கான எந்தச் சாத்திரம், சடங்கும் இல்லாமல் முடிந்த பிரேத எரிப்பு.

''ம்ம்... எல்லாரும் போங்க... பெறப்புடுங்க... போங்க... கெணத்துக்காட்டுக்கு குளிக்கப் போங்க...''

வீரபாண்டியின் அய்யாவை கைத்தாங்கலாக இருவர் அழைத்துச் செல்கின்றனர்.

இன்னும் உட்கார்ந்திருக்கிற செந்தட்டி. வெயிலில் ஓங்கி யெரிகிற தீச்சுடர்களின் நிறம் மங்குகிறது. அலை பாய்கிறது. சாம்பல் துகளும், நெருப்புக் கங்குகளும் காற்றில் அலைகின்றன.

சிதையையே வெறிக்கிற செந்தட்டி. அழுகையில்லாத வெறிப்பு. இறுகிப்போன மௌன வெறிப்பு. வெளிப் பாய்ந்து வழிந்த வருத்தம், துயரமெல்லாம்... குற்ற உணர்ச்சி யாக உருமாறி... உள்முகமாய் குமைந்து... குழைந்து... உறைந்து இறுகிப்போன வெறிப்பு.

வாங்கித் தந்த காரச்சேவு. பிய்த்துத்தந்த சீனிக்கிழங்கு. அள்ளித் தந்த ஒலைச்சீவல்.

தூக்கித் தந்த கருப்பட்டி மிட்டாய்கள். அவன் காட்டிய சாதி கடந்த தே..ழமை.

போச்சு... எல்லாம் போச்சு.

போகலே. எதுவுமே போகலை. நாந்தான் கொன்னேன். தடுக்க முடிந்தும்... தடுக்காமல்... கரண்டுலே வுழுந்து சாகவுட்டேன். சாக வைச்சேன். கரண்டுலே வுழுந்து எங்க அய்யா செத்தாரு. வீரபாண்டியையும் கரண்டுலே வுழுந்து சாகவைச்சுட்டேன். கொன்னுட்டேன்...

உள்முகமாக திரும்புகிற நினைவுகள், செந்தட்டியை உள் முகமாகவே இழுத்துச் செல்கின்றன. ஆழமாய் - ஆழமாய் - இன்னும் ஆழமாய் இழுத்துச் செல்கின்றன.

அவனிடமிருந்தே அவனைப் பிரித்து இழுத்துச் செல்கிற மாய நினைவுகள். பிரக்ஞையிலிருந்து அவனை அகற்றுகிற குற்ற உணர்ச்சி.

கட்டையில் எரிந்து முடிந்து விட்டான் வீரபாண்டி. எரியாத் கட்டையாக - இரவுப் பிராணியாக - இன்னும் அலைகிற செந்தட்டி.

செந்தட்டி மரங்களின் உச்சிகளில் ஏறிக்கொண்டு, இப்போதும் பார்க்கிறான். சுடுகாட்டில் தீ எரிகிறது. வீரபாண்டி எரிகிறான்.

- நிறைவு -

- "நம்பர் 1 நாவல்" என்ற இதழில் பிரசுரமானது

மே. 2003

மின்னூல் ஆக்கம்: தமிழ்வாசகன்

★★★

